


# லக்ஸ் டாய்லட் சோப்

## எம். வி. ராஜம்மாவின்

### மென்மைவாய்ந்த மிருதுவான மேனியை காப்பாற்றுகிறது . . .

கீர்த்திபெற்ற பாடகியான இந்நட்சத்திரம் தனது களங்கமற்ற மிருதுவான மேனியை விசேஷ மதிப்புடன் வைத்திருப்பதனுலேயே மேனிக்கு எப்பொழுதும் ஒப்பற்ற பாதுகாப்பை அளிக்கிருர். அழகைத்தரும் பாதுகாப்பு முறையை தவருமல் கையாள்வதனுலேயே நீடித்து நிற்கும் மேனியழகைப் பெறலாம் என்பது அவருக்குத் தெரியும். இதனுல்தான் எம். வி. ராஜம்மா லக்ஸ் டாய்லட் சோப்பை உபயோகிக்கிருர்.

நீங்களும் இந்த சுத்தமான, வெண்ணிறம் கொண்ட சோப்பை எப்பொழுதும் உபயோகியுங்கள். இதன் சுறுசுறுப்பான சுத்த நுரை உங்கள் சருமத்தை மென்மையாகவும், களங்கமற்றதாகவும், பிரகாசமாகவும் வைத்துக்கொள்வதைக் காண்பீர்கள்.

வாஹினி பிக்சர்ஸாரின் புதுப்படமான "யோகி வேமனு" வில் எம். வி. ராஜம்மாவின் நடிப்பு, அவரது பழைய விசிறிகளுக்கு மகிழ்ச்சியளிப்பதுடன், இன்னும் பல ரஸிகர்களின் நன்மதிப்பையும் பெறச்செய்யும்.

**லக்ஸ் டாய்லட் சோப்**

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 166-22-40 TM.

LEVER BROTHERS (INDIA) LIMITED

# மூட்டைப் பூச்சித்தொல்லையா?
# நியோஸிட் DDT யால் அவற்றை ஒழியுங்கள்



மூட்டைப் பூச்சிகள் உங்கள் இரத்தத்தைக்கெடுத்து மிகுந்த ஆத்திரமூட்டுகின்றன. அத்துடன் பருக்கள், புண்கள் இவற்றிற்கும் அநேகமாக அவையே காரணமாயிருக்கலாம். 10 சதவிகிதம் DDT கலந்துள்ள நியோஸிட்டால் அவற்றை நிச்சயமாய் ஒழியுங்கள்.

நல்லபலனடையவேண்டுமானால் கட்டில், மேசை, நாற்காலி, சுவர், தரை, இவைகளிலுள்ள இடுக்குகளிலெல்லாம் பவுடரைத் தூவி, எவ்வளவு முடியுமோ அவ்வளவு நேரம் அப்படியே வைத்திருக்கவேண்டும். DDT யின் நீடித்த வேலைசெய்யும் சக்தியால் வெகுநேரத்திற்குப்பிறகும் மூட்டைப் பூச்சிகள் நிச்சயம் கொல்லப்படும். இரண்டு வாரத்திற்கொருமுறை மீண்டும் இலேசாகப் பவுடரைத் தூவவும். DDT உடனடியாக வேலைசெய்யாது. ஆனால் அது பூச்சிகளைக் கட்டாயம் கொன்றே தீரும்—இதர பூச்சிகொல்லிகளைப்போலல்லாது அது நீடித்து வேலைசெய்யும் சக்திவாய்ந்தது.

# நியோஸிட்டை
## சரியானபடி உபயோகியுங்கள்!

**DDT Geigy DDT**

சென்னை ராஜதானியில் ஒப்பிவைக்கப்பட்ட ஜில்லாக்கள் தவிர, திருவாங்கூர், கொச்சி மற்றும் புதுக்கோட்டை சமஸ்தானங்கள் உள்பட விනியோகஸ்தர்கள் :

மெஸர்ஸ் அடிஸன் அண்ட் கோ லிட், மவுண்ட் ரோட், மதராஸ்.

மைசூர் சமஸ்தானம், கூர்குரம், பல்லாரி, அனந்தபூர், கடப்பை கர்நூல் ஆகிய ஜில்லாக்களுக்கு விநியோகஸ்தர்கள் :

மஹமத் ரஹீம் கனி,

99-B உஸ்மான்கான் ரோட், பெங்களூர் ஸிடி.

DJK 5478 TM

விநியோகஸ்தர்கள் :

தென்னிந்தியாவிற்கு : மெஸர்ஸ், அடிஸன் அண்டு கோ., லிமிடெட், மவுண்டுரோடு, மதராஸ்

மைசூர் சமஸ்தானத்திற்கும், ஸீடெட் ஜில்லாக்களுக்கும் :

மெஸர்ஸ். முகமது ரஹீம் கனி, 99-B, உஸ்மான் கான்ரோடு, பெங்களூர் ஸிடி.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 | இதழ் 21

டிசம்பர் 21

சர்வசித்து மார்கழி 6



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 21

# என்ன சேதி?

## அற்புதமான தீர்மானம்

ஒரு முழம் ஏறினால் சாறு முழம் சறுக்கி விடுகிறது! சென்னை மாகாண தேசிய முஸ்லிம்கள் செய்யும் நல்ல காரியத்தை வியர்த்தமாக்க ஒரு கோஷ்டி கிளம்பி யிருக்கிறது. சென்ற வாரம் சென்னையில் நடந்த மாகாண தேசிய முஸ்லிம்கள் மகாநாட்டில் சில முக்கிய தீர்மானங்கள் நிறைவேறின. இந்த மாகாணத்திலுள்ள முஸ்லிம்கள் காங்கிரஸில் சேர வேண்டுமென்பதும், சிறுபான்மையோரைப் பாதுகாக்கும் ஸ்தாபனம் காங்கிரஸ் ஒன்றுதான் என்பதும் தீர்மானங்களில் ஒன்றாகும். மற்றும் இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள் எல்லாரும் மௌலானா அபுல்கலாம் ஆஸாத் மீது நம்பிக்கை வைத்து அவரது அடிச்சுவடுகளைப் பின்பற்ற வேண்டுமென்றும், ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமைக்காகக் காந்திஜி புரிந்து வரும் அற்புதமான தொண்டைப் பாராட்டியும், இந்திய சர்க்கார் மீது பூரண நம்பிக்கை வைத்தும் சில தீர்மானங்கள் நிறைவேறின. வகுப்புவாத ஸ்தாபனங்களிலிருந்து முஸ்லிம்களைச் சென்னை சர்க்கார் காப்பாற்ற வேண்டுமென்பதும் ஒரு தீர்மானம் ஆகும்.

மத்திய மாகாணம், பீரார் தேசிய முஸ்லிம்களின் மகாநாடு ஒன்று அமராவதியில் நடந்திருக்கிறது. அந்த மகாநாட்டிலும் பேசியுள்ள முஸ்லிம் பிரமுகர்கள், காங்கிரஸில் சேருவதால் தங்களுடைய மதத்துக்கு அணுவளவும் ஆபத்து நேராதென்பதை ஆணித்தரமாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அவர்களுக்கு மௌலானா அபுல்கலாம் ஆஸாத் அனுப்பியுள்ள செய்தியிலும், முஸ்லிம்கள் யாதொரு தங்குதடையுமின்றிக் காங்கிரஸில் சேர வேண்டிய அவசியத்தை வற்புறுத்தி யிருக்கிறார்.

## உரிமை பெற வழி

ஆனால், அதே சமயத்தில் கராச்சியில் அகில இந்திய முஸ்லிம் லீக் என்ன தீர்மானம் செய்திருக்கிறது தெரியுமா? மேற்படி முஸ்லிம் லீகை, பாகிஸ்தான் முஸ்லிம் லீக் என்றும் இந்தியா முஸ்லிம் லீக் என்றும் இரு பிரிவுகளாகப் பிரிக்க வேண்டுமென்பதே அத் தீர்மானமாகும். இந்தியாவிலுள்ள பல மாகாணங்களிலும் முஸ்லிம் லீக் கலைக்கப்பட்டு வருகிறது. அந்த லீகின் பரம பக்தர்களாக இருந்தவர்கள் கூடப் பாஞ்சாலப் படுகொலைகளுக்குப் பின் மனம் மாறி வருகிறார்கள். இந் நிலைமையில் பாகிஸ்தானில் கூடிய அகில இந்திய முஸ்லிம் லீக் மேற்கூறிய விதம் தீர்மானம் செய்திருப்பதிலிருந்து மத வெறி, 'இரு தேசக் கொள்கை' இவற்றின் ஆதிக்கம் இன்னும் பலரை ஆட்கொண்டிருக்கிறதென்றே தோன்றுகிறது. அதில் மற்றொரு விசேஷம் என்னவெனில், இந்தியா முஸ்லிம் லீகின் தலைமை ஸ்தானம் சென்னையில் இருக்க வேண்டு மென்பதுதான்! அதிருஷ்டவசமாக, சென்னையில் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை நிலவி வருகிறது. அந்த ஒற்றுமை நீடிக்க வேண்டுமாயின் முஸ்லிம்கள் லீகைக் கலைத்து விட்டு, காங்கிரஸில் சேர வேண்டும். எந்தக் கட்சியாயினும், அது ஏதாவதொரு அரசியல் கொள்கையை ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டுமே யொழிய, மதத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கக் கூடாது. எனவே, மதத்தை ஆதாரமாகக் கொண்ட முஸ்லிம் லீகிற்கு இனி இந்தியாவில் இடமில்லை. இந்த நியதியை முஸ்லிம்கள் அறிந்து தங்களுடைய நிலைமையை மாற்றிக் கொண்டாலன்றி, உத்தியோகங்களிலும் இதரத் துறைகளிலும் பங்குகோர அவர்களுக்கு உரிமையில்லாமல் போகும்.

"அன்னியர் ஆதிக்கத்தை ஒழித்து விட்டோம்; அடுத்தபடி உள்நாட்டு வியாதிகளையும் முறியடிக்க வேண்டும்!" — பாபு ராஜேந்திரர்.

"காஷ்மீரப் பிரச்னையைத் தீர்க்க இரண்டே வழிகள்தான் இருக்கின்றன. அவற்றில் பாகிஸ்தான் விரும்பும் வழி எது?" என்று காஷ்மீர சிங்கம் ஷேக் அப்துல்லா கேட்கிறார்.

# அந்தக் காலம் மலையேறியது!

உண்மையைத் திரித்துக் கூற வேண்டும்; பொய் புனைவதில் பலே ஆசாமியாக இருக்கவேண்டும்; கஷ்டப்பட்டுச் செய்து கொண்ட ஒப்பந்தங்களைக் காற்றுவாக்கில் விட்டுவிட வேண்டும்; சொல்லொன்று செயலொன்றாக இருக்க வேண்டும்; சொல்லாமல் சொல்லி விளங்க வைத்தல் என்பதற்கு நேர்மாறாகச் சொல்லிச் சொல்லி விளங்கவைக்காமல் இருத்தல் வேண்டும்!

இவையெல்லாம் நவீன ராஜதந்திர நிபுணர்களின் விசேஷ (அவ) லட்சணங்களாகும்!

அவர்கள், ஜனநாயகத்தை உலக நாடுகளில் ஸ்தாபிக்க வந்துள்ள கர்த்தாக்கள் தாங்கள்தானென்று கூறுவார்கள். ஆனால் அவர்களுடைய சொந்த தேசத்தின் சுயநலம் வந்து குறுக்கிடும்போது, அவர்களுடைய ஜனநாயக பக்தி பறந்தோடி விடும்.

உலக சமத்துவமே உயர்ந்த கொள்கையென்று பறைசாற்றும் அவர்கள், சுயநலம் காரணமாக நிறத்திமிரை ஆதரிக்கத் தயங்க மாட்டார்கள்.

பாலஸ்தீனப் பிரிவினைக்கு மூல கர்த்தாக்களான பிரிட்டிஷ் ராஜதந்திரிகள், சமீபத்தில் அப் பிரச்னை உலக மகா சபையில் வோட்டுக்கு விடப்பட்ட போது நடுநிலைமை வகித்த நாடகத்தை எவரும் மறக்க முடியாது.

இவ்வாறாக, உலக ராஜதந்திரிகளின் ஊழல்களால்தான் உலக மகாசபை உருவான முறையில் எதுவும் செய்ய முடியாமலிருக்கிறது.

இந்த உண்மையை, ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் அமெரிக்காவிலிருந்த போதே அம்பலப்படுத்தி யிருக்கிறார்.

• • •

ஆனால், இந்திய ராஜதந்திரிகளின் நிலைமையோ அதற்கு நேர்மாறாக இருக்கிறது. திரிகரண சுத்தியாக அவர்கள் செய்யும் காரியங்கள், வல்லரசுகளையெல்லாம் தர்ம சங்கடத்திற்குள்ளாக்கி விடுகின்றன.

நியாயமான கட்சியையே ஆதரிப்பதென்பது இந்தியாவின் கொள்கையாதலால், உலக மகா சபையில் இந்தியா ஒரு சமயம் பிரிட்டனுக்கும அமெரிக்காவுக்கும் ஆதரவாகவும, மற்றொரு சமயம் ருஷ்யாவுக்கு ஆதரவாகவும், வேறொரு சமயம் எல்லா வல்லரசுகளுக்கும் விரோதமாகவும் வோட்டுக் கொடுக்க வேண்டியிருக்கிறது.

சுயநலம் ஒன்றே இந்தியாவின் லட்சியமாக இருக்குமாயின், அந்தச் சபையில் இந்தியா அனுஷ்டிக்கும் முறையே முற்றிலும் வேறு விதமாக இருக்கும்.

இந்தியா பார்லிமெண்டில் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையைச் சமீபத்தில் விளக்கிக் கூறிய பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி, இப்போது உள்நாட்டுக் கொள்கையையும் வியக்தமாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

அதில் சுயநலத்துக்கோ, பித்தலாட்டத்துக்கோ அணுவளவும் இடமில்லை.

கல்கத்தாவில் ஐரோப்பியர் வர்த்தகச் சங்கத்தின் வருஷாந்தரக் கூட்டத்தில், அச் சங்கத்தினர் எப்பொழுதும் வைஸ்ராயைத்தான் பேசும்படி அழைப்பது வழக்கம்.

ஆனால், சென்ற வருஷமும் இந்த வருஷமும் இந்தியாவின் முடிசூடா மன்னரான ஜவாஹர்லால்ஜியை அழைத்துள்ளனர்.

இதுவரை மன்னரின் பிரதிநிதியான வைஸ்ராயை அழைத்த அவர்கள், இப்போது இந்தியாவின் மன்னரையே அழைத்திருப்பது மிகவும் சிலாக்கியமான காரியமே!

எப்போதுமே மேற்படி கூட்டம் மிகவும் முக்கியமானதாக இருக்கும். ஏனெனில், இந்தியாவின் பொருளாதார, அரசியல் பிரச்னைகளை யொட்டி சர்க்காரின் கொள்கை என்னவென்பதை ஐரோப்பியர் வர்த்தகச் சங்கத்தின் வருஷாந்தரக் கூட்டத்தில்தான் வைஸ்ராய் வெளியிடுவது வழக்கம்.

அந்தச் சம்பிரதாயத்தை யனுசரித்துப் பண்டித ஜவாஹர்லால்ஜி, பல்வேறு பிரச்னைகளை யொட்டியும் இந்தி

யாவின் கொள்கை என்ன வென்பதை அந்தக் கூட்டத்தில் விளக்கியிருக்கிறார்.

அக்காலத்தில் மேற்படி சங்கம் அதிகார வர்க்கத்தினரிடையே மிகுந்த செல்வாக்கு பெற்றிருந்தது. இந்திய சர்க்காரின் கொள்கைகளைக்கூட உருவாக்கும் சக்தி அச் சங்கத்தினருக்கு இருந்ததெனலாம். இந்திய சுதந்திரப் போராட்டத்தை ஆவேசத்துடன் கண்டிப்பதில் ஐரோப்பியர் வர்த்தகச் சங்கம் தான் முதல் ஸ்தானம் வகிப்பது வழக்கம்!

ஆனால், அந்தக் காலம் மலையேறி விட்டதென்பதை ஜவாஹர்லால்ஜியின் பிரசங்கம் தெளிவாக்கி யிருக்கிறது.

இந்தியாவில் அன்னியர் ஆதிக்கம் இருந்தகாலத்தில் ஆங்கிலேயர்களுக்கு அரசியல், பொருளாதாரம் முதலிய பல துறைகளிலும் விசேஷ சலுகைகள் அளிக்கப்பட்டிருந்தன. ஏன், சகல விஷயங்களிலும் அவர்கள் இட்டது சட்டமாக இருந்தது.

தங்களுக்கு முன்பிருந்த மகத்துவம் இப்போது இல்லா விட்டாலும், சில விசேஷ சலுகைகளாவது கிடைக்கலாமென்ற சபலம் அவர்களுக்கு இருக்கக் கூடும்.

ஆனால், அத்தகைய சபலம் வீண் சபலம் என்பதை மேற்படி பிரசங்கத்திலிருந்து அவர்கள் சந்தேகமின்றி அறிந்து கொண்டிருக்கலாம்.

இந்தியாவின் பொருளாதார அபிவிருத்திக்கு அன்னிய நாடுகளின் ஒத்துழைப்பை இந்தியா நாடுகிறது. எனினும், அதற்காக இந்தியா தன்னுடைய நலன்களுக்கு விரோதமாக அன்னிய வர்த்தகர்களுக்கு விசேஷ சலுகைகள் எதுவும் காட்ட முடியாது என்பதைப் பிரதம மந்திரி பட்டவர்த்தனமாகக் கூறியிருக்கிறார்.

இந்தியாவின் அரசியல் அந்தஸ்து மாறிவிட்டது. எனவே, அதை அனுசரித்துப் பொருளாதார மாறுதல்களும் ஏற்பட்டுத் தீருமாதலால், அன்னிய வர்த்தகர்கள் தங்களுடைய மனோநிலைமையையும் மாற்றிக் கொள்ள வேண்டுமென்று ஜவாஹர்லால்ஜி வற்புறுத்தி யிருக்கிறார்.

• • •

எந்தத் தேசமாயினும் அதன் பொருளாதார சுபிட்சத்துக்குத் தொழிலாளர்-முதலாளிகளின் ஒத்துழைப்பு அத்தியாவசியமாகும். அவர்களிடையே பரஸ்பரம் அவநம்பிக்கை ஏற்படுவது தேசத்தின் பொருளாதார நிலைமையே பாதிக்கு மென்பதைச் சமீபகால நிகழ்ச்சிகளிலிருந்து சகலரும் தெரிந்து கொண்டிருக்கலாம்.

யுத்தகாலத்தில் அபரிமிதமாக லாபமடைந்த பெரிய முதலாளிகளால் தொழிலாளர்களுக்குப் பலன் எதுவும் ஏற்படவில்லை என்று கூறியுள்ள ஒப்பற்ற தலைவர், உற்பத்திக் குறைவுக்குத் தொழிலாளர்கள் பொறுப்பாளிகளென்பதையும் சுட்டிக் காட்டத் தயங்கவில்லை.

தொழிலாளர்களிடமும் விவசாயிகளிடமும் இந்திய சர்க்காருக்கு அனுதாபமில்லை என்று பித்தலாட்டப் பிரசாரம் செய்யும் பிரகஸ்பதிகளுக்குப் பிரதம மந்திரி சரியான சூடு கொடுத்திருக்கிறார்.

இந்தியாவில் எண்பது சதவிகிதம் பேர்கள் விவசாயிகள்தான். வயது வந்தவர்களுக்கு வோட்டுரிமை என்ற நியதி அமுலுக்கு வரும்போது, அவர்கள்தான் சர்க்காரை அமைக்க வேண்டும். அப்படியிருக்க, அவர்கள் விஷயத்தில் இந்திய சர்க்காருக்குச் சிரத்தையில்லை என்று சொல்லுவது அர்த்தமற்ற பேச்சு என்பதை ஜவாஹர்லால்ஜி எடுத்துக் காட்டியிருக்கிறார்.

தொழிலாளர்கள், விவசாயிகள் தகராறுகளை மத்தியஸ்த சபைகளின் மூலம் தீர்ப்பதுதான் சரியான முறையென்றும் அவர் கூறியிருக்கிறார். அவ்விதமாக ஒரு நிர்ணயமான முறை ஏற்படாவிடில், தொழிலாளர்—முதலாளிகள் தகராறுக்கு எல்லையே இராமற் போய்விடும்.

தொழிலாளர் சங்கங்களை ஆதரிப்பது தான் சரியான முறையென்பதையும் ஜவாஹர்லால்ஜி அங்கீகரித்திருப்பதிலிருந்து, தொழிலாளர்களின் முன்னேற்ற விஷயமாக சர்க்காருக்குள்ள சிரத்தையில் நியாயபுத்தி படைத்தவருக்கும் சந்தேகம் இருக்க இடமில்லை.

• • •

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இருக்க வேண்டிய உறவைப் பற்றியும் ஜவாஹர்லால்ஜி பிரஸ்தாபித்திருக்கிறார்.

இரு தேசங்களும் ஒரே தேசத்திலிருந்து பிரிந்தவை. பூகோள அமைப்பு, சரித்திரம், பண்பாடு, பொருளாதாரம் முதலிய பல்வேறு அம்சங்களையும் கவனிக்கும்போது, இரு தேசங்களும் பரஸ்பரம் அன்னியோன்னிய பாவத்துடனிருந்துதான் தீர வேண்டும். இரு தேசங்களும்

வருங் காலத்தில் சுபிட்சமாகவும் க்ஷேமமாகவும் விளங்க அதைத் தவிர வேறு வழியில்லை என்றும் ஜவாஹர்லால்ஜி கூறி யிருப்பது பாகிஸ்தான் சர்க்கார் செவிகளில் விழுமா வென்பதே இப்போது கேள்வியாகும்.

பாகிஸ்தான்மீது தங்களுக்குக் கெட்ட எண்ணம் எதுவுமில்லை யென்பதைப் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜியும், உதவி பிரதம மந்திரி சர்தார் பட்டேலும் செய்கையில் காட்டி யிருக்கிறார்கள்.

மத்தியஸ்த சபைக்குப் போகாமலே, பாகிஸ்தானுக்குச் சாதகமாக மிகவும் விட்டுக் கொடுத்து இந்திய சர்க்கார் செய்து கொண்டுள்ள நிதி ஒப்பந்தத்துக்காக பாகிஸ்தான் இந்தியாவுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.

இந்தியாவிலிருந்து பர்மா பிரிந்த போது, இரு நாடுகளுக்குமுள்ள நிதிப் பிரச்னைகள் தீர ஐந்து வருஷங்களாயின.

ஆனால், இந்தியா - பாகிஸ்தான் நிதிப் பிரச்னைகள் ஐந்து மாதங்களில் திருப்திகரமாகத் தீர்ந்திருப்பதற்கு இந்தியாவின் உதார குணமே காரணம் என்பதை பாரபட்சமற்றவர்கள் ஒப்புக் கொண்டிருக்கின்றனர்.

எந்த விஷயத்தையும் இறுதி வரையில் ஆட்சேபிக்கும் பாகிஸ்தான் கூட அதற்கு இணங்கி யிருப்பதே மேற்படி உண்மையை விளக்கப் போதுமானது.

சர்தார் பட்டேல் கூறியிருப்பது போல், இந்திய சர்க்கார் பாகிஸ்தான் விஷயத்தில் பெருந் தன்மையுடனும் சிநேக பாவத்துடனும் நடந்துகொண்டிருக்கிறார்கள். ஆனால், அந்தப் பெருந் தன்மையும் நட்பும் பாகிஸ்தானிடம் பிரதிபலிக்குமென்று தோன்றவில்லை.

ஏனெனில், காஷ்மீர் யுத்தத்தைப் பற்றிப் பிரசாரம் செய்யும் பாகிஸ்தான் ரேடியோ, கொள்ளைக் காரர்களையும் கொலைகாரர்களையும் சுதந்திர வீரர்கள் என்று வர்ணிக்கிறது.

இந்திய சர்க்காரின் அறிக்கைகளை, 'நமது விரோதிகளின் அறிக்கைகள்' என்று கூசாமல் குறிப்பிடுகிறது.

பாகிஸ்தான் பத்திரிகைகளும் சரி, தலைவர்களும் சரி, 'மதத்துக்கு ஆபத்து' என்ற பழைய பல்லவியையே இன்னும் பாடிக் கொண்டிருப்பதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

எனவே, பாகிஸ்தான் தலைவர்களுடைய மனோ நிலைமையில் புரட்சிகரமான மாறுதல் ஏற்பட வேண்டும். பாகிஸ்தான் நாசகரமான பாதையை விட்டுவிட்டு, நேர்மையான பாதைக்கு வரவேண்டும். எதிர்காலத்தில் பாகிஸ்தானும் இந்தியாவும் சுபிட்சமடைய அதுதான் வழி.

பண்டித ஜவாஹர்லால் நேரு எடுத்துக் காட்டி யிருப்பதும் அதுதான்.



● கானாடுகாத்தானைச் சேர்ந்த திரு எஸ். ஆர். எம். சிடி. எஸ். சபாரத்தினம் செட்டியார் காலமானது அறிந்து மிகவும் வருந்துகிறோம். திருவானைக் காவல் ஆலயத்தைப் புதுப்பிப்பதற்காகப் பதினைந்து லட்சம் ரூபாய் இது வரை செலவு செய்திருக்கும் கொடையாளிக் குடும்பத்தை இவர் சேர்ந்தவர். இந்தியன் பாங்கி டைரக்டரா யிருந்தவர். நீண்ட காலத்துக்கு முன்பே ஹரிஜன முன்னேற்றத்தின் அவசியத்தை உணர்ந்து லால்குடி ஹரிஜன் ஹாஸ்டலுக்கு ரூ. 20.000 நன்கொடையளித்தவர். காலஞ்சென்ற இந்த உத்தம புருஷரின் சகோதரர்களான ஸ்ரீ பழனியப்பச் செட்டியாருக்கும், ஸ்ரீ ட்ரோஜன் அண்ணாமலைச் செட்டியாருக்கும், மற்றுமுள்ள உறவினருக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# தர்ம சங்கடம்!


என்-ஜி-ஓ-க்கள்
படாத பாடு படுகி-
றோம், பஞ்சப் படியை
யாவது உயர்த்தித்
தொலையுங்கள்.


சென்னை சர்க்கார்
உங்கள் கோரிக்கையைக்
கவனமாக ஆராய்ச்சி
செய்கிறோம். ஆனால்,
பையில் பணம் இல்லையே?


பொது ஜனம்.
இன்னும் அதிக வரி
விதித்தால் ஆளுக்கே
ஆபத்தாக முடியும்!

# வேலைக்குத் திரும்புங்கள்!

இந்தியா தேசத்திலேயே இதுவரையில் ஏற்படாத விபரீத நிலைமை சென்னை மாகாணத்தில் ஏற்பட்டிருக்கிறது.

மாகாண மெங்கும் சர்க்கார் காரியாலயங்களில் வேலை பார்த்த சொற்ப சம்பள உத்தியோகஸ்தர்கள் — என். ஜி. ஓ. க்கள் — வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள். வேலை நிறுத்தம் செய்தவர்கள் சுமார் ஒன்றரை லட்சம் பேர் என்று சொல்லப்படுகிறது. இவர்களில் பெரும்பாலோர் மாதம் நாற்பது ரூபாய் முதல் எண்பது ரூபாய் வரையில் சம்பளம் வாங்கி எளிய வாழ்க்கை நடத்தும் குமாஸ்தாக்கள். காரியாலயங்களில் வேலை செய்து முடியாமல் பைல்களை வீடுகளுக்கும் எடுத்துச் சென்று இரவில் வேலை செய்பவர்கள். சிறு பகுதியார் எண்பது ரூபாய்க்குமேல் இருநூறு ரூபாய் வரையில் சம்பளம் வாங்கும் சூபரிண்டெண்டுகள், சப்மாஜிஸ்ட்ரேட்டுகள் முதலியோர்.

என். ஜி. ஓ. க்கள் இவ்விதம் வேலை நிறுத்தம் செய்ய முன்வந்ததைப் பற்றிப் பெரிதும் வருந்துகிறோம்.

அவர்கள் வேலை நிறுத்தம் செய்யும் அளவுக்கு நிலைமை சேகலமாகும்படி விட்டுவிட்ட சென்னை சர்க்காரைக் குறித்தும் வருத்தப்படுகிறோம்.

* * *

என். ஜி. உத்தியோகஸ்தர்களின் கட்சி நியாயமானது; அவர்களுடைய கோரிக்கைகள் நியாயமானவை.

ஓர் உதாரணம் பார்க்கலாம்.

பத்து வருஷத்துக்கு முன்னால் ஒரு சர்க்கார் காரியாலய குமாஸ்தா நாற்பது ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தார்.

வருஷத்துக்கு ஒன்றரை ரூபாய் சம்பளம் அதிகம் ஆகிவந்தது. இன்றைக்குச் சம்பளம் ரூ. 55; பஞ்சப்படி ரூ. 17-8-0. ஆக வருமானம் ரூ. 72-8-0.

பத்து வருஷத்துக்கு முன்னாலிருந்தது போல் இன்றைக்கு மூன்று மடங்கு எல்லா வாழ்க்கைச் செலவுகளும் ஏறியிருக்கின்றன. சர்க்கார் புள்ளி விவரங்களே இதை எடுத்துக் கூறுகின்றன.

எனவே, பத்து வருஷத்துக்கு முன்னால் ரூ. 40 சம்பளம் வாங்கியவர் இன்றைக்கு ரூ. 120 சம்பளம் வாங்கினால், அதே சம்பளம் வாங்கியதாகும்!

ஆனால் இன்று மேற்படி குமாஸ்தா பெறுவது மொத்தம் ரூ. 72-8-0 தான். அதாவது பத்து வருஷத்துக்கு முன்னால் வாங்கிய சம்பளத்தைக் காட்டிலும் இன்று குறைவு; 100-க்கு 60 பங்குதான்!

இது அநியாயமான நிலைமை என்று எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள்.

* * *

என். ஜி. ஓ. க்களின் கோரிக்கைகள் அமிதமானவை யல்ல.

இந்திய சர்க்கார் தங்கள் சிப்பந்திகளுக்கு ஏற்படுத்தி யிருக்கும் சம்பள விகிதமும் பஞ்சப்படி விகிதமும்தான் இவர்களும் கேட்கிறார்கள். "சம்பள விகிதத்தை அவ்வளவு உயர்த்த முடியாவிட்டாலும் பஞ்சப்படியாவது இந்திய சர்க்கார் விகிதப்படி கொடுங்கள்!" என்று கேட்கிறார்கள்.

இந்திய சர்க்காரின் பஞ்சப்படி விகிதத்துக்குப் பாதி அளவு சென்னை சர்க்காரால் தற்சமயம் கொடுக்கப்பட்டு வருகிறது.

ரயில்வே உத்தியோகஸ்தர்கள், தபால் இலாகா சிப்பந்திகள், ஆலைத் தொழிலாளிகள் ஆகியோர் என். ஜி. ஓ.க்களைவிட அதிகமாகப் பஞ்சப்படி பெறுகிறார்கள்.

வர்த்தகக் கம்பெனிகள், பாங்கிகள் முதலியவற்றில் சிப்பந்திகள் என். ஜி. ஓ.க்களைவிட அதிக சம்பளமும் பஞ்சப்படியும் பெறுகிறார்கள். பல கம்பெனிகள் ஒரு மாதச் சம்பளம் முதல் நாலு மாதச் சம்பளம் வரையில் போனஸ் கொடுக்கின்றன.

எனவே, என். ஜி. ஓ.க்களின் கோரிக்கையை அதிகம் என்று சொல்வதற்கில்லை.

* * *

சென்னை, மதுரை, திருச்சி முதலிய பட்டணங்களில் இந்தக் காலத்தில் படித்த நடுத்தர வகுப்பார் நடத்தும் வாழ்க்கையில் உள்ள கஷ்டங்கள் சொல்லத் தரமல்ல.

படி ஒன்றரை ரூபாய்க்குப் பால் விற்கிறது. காப்பிக் கொட்டை, சர்க்கரை விலை கேட்க வேண்டியதில்லை. காப்பி-

குடிக்கும் வழக்கமுள்ள குடும்பத்தில், என். ஜி. ஓ. சம்பளத்தில் பாதி காப்பிக்குச் செலவாகிவிடும்.

பிறகு, சாப்பாட்டுச் செலவு, வீட்டு வாடகை, துணிமணிகள், குழந்தைகளின் பள்ளிக்கூடச் சம்பளம், டிராம்-பஸ் செலவு எல்லாம் இருக்கின்றன.

மூவாயிரம், நாலாயிரம் செலவு செய்து காலேஜ் படிப்புப் படித்துவிட்டு வந்த என். ஜி. ஓ.க்களின் குடும்ப வாழ்வு நாக வாழ்வாகவே இருக்கும் என்பதில் ஐயமில்லை.

எனவே, அவர்கள் சம்பள உயர்வும் பஞ்சப்படி உயர்வும் கேட்பதற்கு எல்லா நியாயங்களும் இருக்கின்றன.

* * *

இவ்வளவு நியாயமான கட்சியை வைத்துக்கொண்டு அதற்கு முறை தவறான வழியைக் கடைப்பிடிக்க நேர்ந்தது பற்றிப் பெரிதும் வருந்துகிறோம்.

என். ஜி. ஓ.க்கள் தேசத்தின் விரோதிகளல்ல. அவர்களில் பெரும்பாலோர் தேச பக்தர்கள்; காங்கிரஸ் அபிமானிகள்; கதர் அணிபவர்களும் உண்டு. என்.ஜி.ஓ.க்களில் 100-க்கு 95-பேர் பஞ்சன் பெட்டியில் வோட்டுப் போட்டவர்கள்.

அப்படித் தேசாபிமானம் உள்ளவர்கள் தற்சமயம் நமது நாடு உள்ள நிலைமையையும், காங்கிரஸ் சர்க்காரின் கஷ்டங்களையும் கொஞ்சம் நிதானமாக யோசித்துப் பார்த்திருக்க வேண்டும்.

எந்த மாகாணத்திலும் இப்போதுள்ள மந்திரி சபை எப்போதும் சாசுவதமல்ல. இன்றுள்ள மந்திரி சபை நாளைக்கு மாறலாம்.

ஆனால் காங்கிரஸ் ஸ்தாபனம் சாசுவதமானது. காங்கிரஸுக்கும் காங்கிரஸ் சர்க்காருக்கும் மரியாதை செலுத்துவது பொது மக்களின் கடமை; அது என். ஜி. ஓ.க்களின் விசேஷக் கடமை.

மந்திரி சபையின் தீர்ப்பே முடிவானதல்ல; மாகாணச் சட்டசபை இருக்கிறது.

இன்னும் மேலே அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும், காங்கிரஸ் காரியக் கமிட்டியும் இருக்கின்றன. மத்திய சட்டசபை இருக்கிறது; மனிதர்களில் மாணிக்கமான ஜவாஹர்லாலைத் தலைவராகக் கொண்ட மத்திய அரசாங்கம் இருக்கிறது. எனவே, மேலும் சட்டபூர்வமான முறைகளிலேயே பிரயத்தனம் செய்து தங்கள் குறைகளைத் தீர்த்துக் கொள்ள என். ஜி. ஓ.க்களுக்கு வசதிகள் இருக்கின்றன.

அப்படியிருக்கும்போது, வேலை நிறுத்த முறையைக் கையாண்டது நியாயமல்ல.

* *

வேலை நிறுத்தத்தின் மூலம் என். ஜி. ஓ.க்கள் தங்கள் நிலைமை எவ்வளவு நெருக்கடியாயிருக்கிறது என்பதைக் காட்டி விட்டார்கள். தங்களுடைய சங்கத்தின் ஒற்றுமையையும் கட்டுப்பாட்டையும் நிரூபித்து விட்டார்கள்.

இது போதுமானது.

இந்த இதழ் வெளியாகிற வரையில் அவர்கள் வேலைக்குத் திரும்பியிராவிட்டால் உடனே திரும்பிச் செல்லும்படி ரொம்பவும் கேட்டுக் கொள்கிறோம்.

இனி அவர்களுடைய கட்சியைப் பொது மக்களே கவனித்துக் கொள்வார்கள் என்று உறுதி கூறுகிறோம்.

மறு பக்கத்தில், பழி வாங்கும் திட்டத்தைக் கைக்கொள்ள வேண்டாம் என்று சென்னை மந்திரிமார்களைப் பெரிதும் வேண்டிக் கொள்கிறோம்.

அவர்களுடைய ஏழைச் சிப்பந்திகளின் கஷ்டங்களுக்கு இரங்கி உடனே தக்க உதவி செய்யும்படி கோருகிறோம்.

காங்கிரஸ் மகாசபையின் முக்கிய இலட்சியங்களில் ஒன்று, பெரிய சம்பளங்களைக் குறைப்பதும், சொற்ப சம்பளங்களை அதிகமாக்குவதுமாகும் என்பதை நமது காங்கிரஸ் மந்திரிகளுக்கு நினைவூட்டுகிறோம்.

# செய்யாத தவம் செய்தோம்!



1. செய்யாத தவமேதோ செய்திருக்கோம் அண்ணே!
சென்மத்தில் சேர்ந்தபல புண்ணியந்தான் முன்னே
பொய்யாது புவிதுறந்த மன்னனுக்குப் பின்னே
புகழ்நிலைக்க ராஜாஜி பிறந்திருக்கார் சொன்னேன்.

2. அறிவுக்கு அறிவண்ணே அடக்கத்தின் உருவம்
குருவுக்குக் குருவாகும் கொண்டாடும் தெய்வம்
நெறிவிட்டுப் புரளாத நிலையான உள்ளம்
நினைத்தாலும் இணைகாணா நிறைநிற்கும் செல்வம்.

3. கொந்தளிக்கும் கடல்நடுவே குமைந்துநிற்கும் படகை
குறியறிந்து திசைசெலுத்திக் கரைசேர்க்கும் தீரன்
சுற்றிலுமே இருள்மண்டிச் சோர்ந்திருக்கும் வேளை
சுடரான அறிவாலே வழிகாட்டும் வீரன்.

4. மந்திரியாய் ராஜாஜி மாட்சியுடன் ஆண்ட
மகிமையுள்ள காலத்தை மறப்போமோ அண்ணே!
அந்தநாளும் வந்திடுமோ என்றுநித்தம் மனசு
அடிக்கடியே துடிக்குதொரு ஆவலினால் அண்ணே!

5. சின்னஞ் சிறுகதையாம் பாரதமாம் கீதை
சீராக வேதாந்த சாரமெல்லாம் கூட்டி
உன்னையென்னைப் போலிருக்கும் உலகத்தா ரெல்லாம்
உருவாய்ப் படித்தறிய எழுதினார் அண்ணே!

6. மைநிறத்துக் கண்ணாடி மறைத்திருக்கு அந்த
மதியூகம் நிறைந்திருக்கும் மாசற்ற கண்ணை
நெய்நிறைந்த விளக்கடங்கி நேர்மையுடன் எரியும்
நெகிழாத சிரிப்பிலவர் பெருமைநன்கு தெரியும்.

7. கைகூப்பித் தொழுதிடுவோம் கடவுளைநாம் அண்ணே
கணக்கற்ற காலமவர் வாழுவரம் வேண்டி.
செய்யாத தவமேதோ செய்திருப்ப தாலே
தென்னாட்டில் பிறந்திருக்கார் ராஜாஜி அண்ணே!

—காட்டூர் கண்ணன்.

# விழா எனில் இது விழா!

ராஜாஜியின் எழுபதாவது பிறந்த தின விழாவைக் கொண்டாட வேண்டும் என்று சில அன்பர்கள் பத்திரிகைகளில் விண்ணப்பம் செய்து கொண்டபோது, அந்த விழா தமிழ்நாடெங்கும் இவ்வளவு அமோகமாக நடைபெறும் என்று எண்ணியேயிருக்க மாட்டார்கள்.

ராஜாஜி ஜயந்தி வாரத்தில் சென்னை நகரிலே மட்டும் ஏறக்குறைய 120 வாழ்த்துக் கூட்டங்களும், படத் திறப்பு வைபவங்களும் நடைபெற்றன!

சர்க்கார் மாளிகையைச் சேர்ந்த 'பாங்க்வெடிங் ஹால்' பத்தாம் தேதியன்றும் பதினாலாம் தேதியன்றும் அளவில்லாத குதூகலத் திருவிழாக் காட்சி அளித்தது. 10௳ பிரதம மந்திரி ஓமந்தூர் ரெட்டியாரின் தலைமையில் சபாநாயகர் சிவசண்முகம் அவர்கள் விழாவை ஆரம்பித்து வைத்தார்கள். அன்று மொத்தம் 14 பிரசங்கிகள் பேசினார்கள். எல்லாப் பிரசங்கங்களிலேயும் வைஸ் சான்ஸலர் டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியாரின் பிரசங்கம் இணையில்லாத பெருமை வாய்ந்திருந்தது. ஒவ்வொரு வார்த்தையும் உண்மை உள்ளத்திலிருந்து பொங்கி வந்து அன்பும் ஆர்வமும் கனிந்து விளங்கியது. "1942-க்கு முன்னாலிருந்த ராஜாஜியைக் காட்டிலும் அதற்குப் பிந்தைய ராஜாஜியையே நான் போற்றுகிறேன். நேற்று வரை நண்பர்களாயிருந்தவர்கள் அவரைக் கைவிட்டு விரோதியைப் போல் நடத்தினார்கள். ஆயினும் அவர் தாம் கண்ட உண்மை நெறியிலிருந்து விலகவில்லை. அது மட்டுமல்ல; நேற்று வரை நண்பர்களாயிருந்து இன்று கைவிட்டவர்களைப்பற்றிக் குறை கூறி ஒரு வார்த்தையும் அவர் சொல்லவில்லை!" என்று டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார் கூறியது, ராஜாஜியின் குண நலத்தை எவரெஸ்டு சிகரத்தின் அளவாக உயர்த்தியது.

14௳ யன்று தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ காமராஜ நாடாரின் தலைமையில் நடந்த கூட்டம் முந்தையக் கூட்டத்தைக் குதூகலத்தில் மிஞ்சி நின்றது. 'பாங்க்வெடிங்' ஹாலுக்கு 'ராஜாஜி ஹால்' என்று பெயர் சூட்ட வேண்டுமென்று ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரி குறிப்பிட்டதை, மராமத்து இலாகா மந்திரி கனம் பக்தவத்ஸலம் ஒப்புக்கொள்ள, மகா ஜனங்கள் கரகோஷ ஆரவாரத்துடன் அதை ஆமோதித்து உறுதிப்படுத்தி விட்டார்கள்.

ராஜாஜியின் நூல்களைச் சகல ஜனங்களுக்கும் மிக மலிவான விலையில் கொடுக்கும்படியாக ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும், அதற்குத் தமிழ் மக்கள் தாராளமாகப் பொருளுதவி செய்ய வேண்டும் என்றும் பிரதம மந்திரி விண்ணப்பம் செய்தது இந்தக் கூட்டத்தில் முக்கியமான விஷயம்.

மத்தியக் கமிட்டியார் ஏற்பாடு செய்த இந்த மாபெரும் வைபவங்களைத் தவிர, சென்னை நகரின் ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் ராஜாஜி விழா வெகு உற்சாகமாகக் கொண்டாடப்பட்டது. திருவல்லிக்கேணியும், தியாகராஜ நகரும், மயிலாப்பூரும், புரசைவாக்கமும், சிதம்பர நகரும், வண்ணாரப்பேட்டையும், நுங்கம்பாக்கமும், ராயபுரமும் போட்டியிட்டுக் கொண்டு திருவிழாக் கொண்டாடின.

'கோகுலம் காலனி'யைச் சேர்ந்த ஹரிஜனங்கள் ராஜாஜி ஜயந்தியைப் பிரமாதமாகக் கொண்டாடினார்கள்.

பிரதம மந்திரி ரெட்டியார், டாக்டர் சுப்பராயன், டாக்டர் ராஜன், ஸ்ரீ எம். பக்தவத்ஸலம், கனம் சிவசண்முகம் பிள்ளை, ஷெரிப் ராமசாமி நாயுடு, புதிய ஷெரிப் ஷாபி முகம்மது ஆகியவர்களுக்கு ஒரு வாரம் முழுதும் ராஜாஜி விழாவில் கலந்து கொள்வதே முக்கிய அலுவலாயிருந்தது.

தமிழ் நாட்டில் ராஜாஜி ஜயந்தி கொண்டாடப்படாத நகரமோ, பட்டணமோ, கிராமமோ ஒன்றுமே இல்லையென்று தோன்றுகிறது.

ஜயம்பேட்டை அன்பர்கள் முதலில் 70 காளை மாடுகள் பூட்டிய ரதத்தில் ராஜாஜி படத்தை வைத்து ஊர்வலம் விட நினைத்தார்களாம். ஆனால் காளை மாடுகள் மேலும் மேலும் கொண்டு வரப்பட்டதில் மொத்தம் 127 காளைகள் பூட்டி ஊர்வலம் நடத்தினார்களாம். ராஜாஜி 127 பிராயம் வரையில் வாழ்ந்து தேசத்துக்குச் சேவை செய்ய வேண்டுமென்று தீர்மானமும் நிறைவேற்றினார்களாம்!

மொத்தத்தில் தமிழ் மக்கள் ராஜாஜியிடம் எவ்வளவு உண்மை அன்பும் அபிமானமும் கொண்டிருக்கிறார்கள் என்பது இந்தப் பிறந்த தின விழாக் கொண்டாட்டத்தின் மூலம் நன்கு வெளியாயிற்று.

தமிழ் மக்கள் மட்டுமா? சென்னை தங்கசாலை வீதியில் குஜராத்திகள் எவ்வளவோ உற்சாக குதூகலத்துடன் ராஜாஜி விழாவும் படத் திறப்பு வைபவமும் நடத்தினார்கள்.

இரண்டு வருஷத்துக்கு முன்னால் தமிழ் நாட்டில் நடந்த சம்பவங்கள் எல்லாம் ஒரு மாயக் கனவோ என்று சொல்லும்படியாகி விட்டது.

• • •

பிறந்த தினப் பரிசிலாக நாம் ராஜாஜிக்குக் கொடுக்கக் கூடியது ஒன்றுமில்லை. அவர் நம்மிடம் எதிர்பார்ப்பதும் ஒன்றுமில்லை. எனவே, ஒரு வயதையாவது கொடுத்து வைப்போமென்று ராஜாஜி ஜனன விழாக் கமிட்டியார் உத்தேசித்தார்கள்! முதன் முதலில் ராஜாஜி ஜனனமான தினத்தை ஒன்று என்பதாக வைத்துக் கொண்டு கணக்கிட்டு எழுபதாவது பிறந்த தினம் என்றார்கள். இப்படிக் கணக்கிடுவது வழக்கமில்லையாதலால், முதல் ஆண்டு நிறைவிலிருந்து கணக்கிட்டு 69-வது வயதுதான் தமக்குப் பிறந்திருக்கிறது என்று ராஜாஜி தெரிவித்திருந்தார். மிகவும் சந்தோஷம். இந்த வருஷம் 70-வது பிறந்த தினம் கொண்டாடி விட்டோம். அடுத்த வருஷமும் கொண்டாடுவோம். இன்னும் பல வருஷமும் 70-வது பிறந்த தினமே கொண்டாடுவதற்கும் நாம் தயார்தான்.

• • •

மொத்தத்தில் தமிழ் நாட்டுக்கும் தமிழர்களுக்கும் ஏதோ பெரிய அதிர்ஷ்டம் பிறந்திருக்கிறது, நல்ல காலம் வந்திருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை.

பாரதி மண்டபம் கட்டியபோதும் வ. உ. சி. விழாக் கொண்டாடிய போதும் சில சந்தேகப் பிராணிகள், "தமிழர்கள் செத்துப் போனவர்களைத்தான் கொண்டாடுவார்கள்!" என்று குறை கூறினார்கள். "அப்படியில்லை; ஜீவிய வந்தர்களான பெரியோர்களையும் போற்றுவோம்; திருவிழாக் கொண்டாடுவோம்!" என்று இந்த வருஷ முடிவிற்குள்ளேயே தமிழ் மக்கள் நிரூபித்துவிட்டார்கள். இதைவிட மகிழ்ச்சி தரும் விஷயம் வேறு என்ன உண்டு?

வாழிய செந்தமிழ்! வாழ்க தமிழ் நாடு! வாழி தமிழ் மக்கள்!

# ஆனல் நிச்சயமாய் அதனுடைய விலை இதைவிட அதிகம்தான்?




..அப்படியில்லை... கோல்டன் பிளாட்டினம் பேனா முன் இருந்த விலையான ரூ. 3-1-0 க்கே கிடைக்கிறது. சரக்குக்குறைவு ஏற்பட்டிருந்தாலும், விலைகள் அதிகமாயிருந்த போதிலும் கோல்டன் பிளாட்டினம் பேனாவின் இலக்ஷணம் எப்பொழுதும் போல உயர்ந்ததாகவே இருக்கிறது. ஒவ்வொரு உண்மையான பிளாட்டினம் பேனா குழலின் மேலும் நிப்பின் மேலும் பேனாவின் பெயர் செதுக்கப்பட்டிருக்கிறது— "பிளாட்டினம்" என்ற பெயர் இருக்கிறதா என்று பாருங்கள். மோசடிகளை வாங்காதீர்கள்

கோல்டன் பிளாட்டினம்

**GOLDEN Platignum** REGD

இங்கிலாந்தில் செய்யப்பட்டது

[illegible] வியாபார உரிமையாளர்கள்:-

மூல்லர் அன்டு பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்

15, கங்குராம செட்டித் தெரு, மதராஸ்

# ஆகாச வெடி

"மாஸ்கோ நகரில் ஒரு கொத்துப் பூ ஐம்பது ரூபாய் விலைக்கு விற்கிறது."

—ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி.

பூ! இவ்வளவுதானா?

★

"சங்கீத அப்பியாசம் செய்வது எப்படி என்னும் பொருள் பற்றி ஸ்ரீ......... என்பவர் பேசினார்."

—செய்தி.

'சங்கீத அப்பியாசத்தைச் சகிப்பது எப்படி?' என்னும் பொருள் பற்றிப் பேசினால் பலருக்குப் பயன்படு மல்லவா?

★

'தென்னாப்பிரிக்காவில் வேகமாகச் செல்லும் பிரகாசமான வால் நக்ஷத்திரம் ஒன்று காணப்பட்டது."

—லண்டன் செய்தி.

"ஸ்மட்சுக்கு வேகமாக வந்து கொண்டிருக்கும் கேடு காலத்தையே இது குறிக்கிறது!" என்கிறார் ஒரு ஜோஸியர்.

★

"பூனாவிலிருந்து ஹைதராபாத்துக்குச் சென்று கொண்டிருந்த ஒரு லாரியில் இருபத்தேழு மூட்டை அப்ப சி ரவைகள் இருந்ததால், அதைப் போலீஸார் தடுத்து விட்டனர்."

— தினசரியில் ஒரு செய்தி.

"இப்படி மூட்டை மூட்டையாக ரவையைக் கொண்டு போனால் பலகாரத்துக்கு எப்படி ரவை கிடைக்கும்" என்று ஒரு பாட்டி அம்மாள் கேட்கிறாள்.

★

"ரயிலில் சென்று கொண்டிருந்த ஒரு எம். எல். ஏ., தமது பையிலிருந்து மணி பர்ஸைக் களவாட முயன்ற திருடனைப் பிடித்து விட்டார்."

—பத்திரிகைச் செய்தி.

எம். எல். ஏ. க்கள் எல்லாருமே தூங்கு மூஞ்சிகளா யிருப்பார்கள் என்று அந்த ரயில் திருடன் எண்ணிவிட்டான் போலும்!

"துறைமுகத்தில் சில நபர்கள் திருட முயலுகையில் போலீஸ்காரர்களும் காவலாளிகளும் தலையிட்டதால், அவர்களை அடித்துப் போட்டுவிட்டு ஓடி விட்டனர்."

—சென்னைச் செய்தி.

அவர்களை அடித்தாலும் அடித்துவிட்டுப் போகிறார்கள்; சாமான்களை அடித்துக் கொண்டு போகாமல் இருந்தார்களே!

★

"காலையில் மணம் செய்து கொண்ட ஒரு நபர் மாலையில் விஷத்தைக் குடித்துத் தற்கொலை செய்து கொள்ள முயற்சித்தான்." —ஒரு செய்தி.

சில மணி நேரத்திற்குள்ளாகவே மேற்படி நபருக்கு இல்லற வாழ்க்கை விஷமாகப் போய்விட்டது போலும்!

★

"ஒரு ஹரிஜனனுக்குத் தலைமயிர் வெட்டவும் க்ஷவரம் செய்யவும் மறுத்த நாவிதர் ஒருவரைப் பம்பாய்ப் போலீசார் கைது செய்தனர்."

—பத்திரிகைச் செய்தி.

விஷயம் இவ்வளவு தூரத்திற்கு வளர்ந்து விடும் என்று அந்த நாவிதர் எதிர் பார்த்திருக்க மாட்டார்!

★

"ஹெல்டர் ஜிராவ்ட் என்னும் நியூயார்க் மாது தான் காதலித்த வாலிபனை அடையும் வரை உண்ணாவிரதம் இருக்கத் தீர்மானித்துள்ளதாகத் தெரிகிறது."

—லண்டன் செய்தி.

'காதல் இன்றேல் சாதல்' என்பதே அவளது தீர்மானம் போலும்!

★

"ஒரு விநோதமான நோயால் பீடிக்கப்பட்டுள்ள ஒரு சிறுவனின் தேகம் கருங்கல்லைப் போல் கெட்டியாகி விட்டது."

—வைத்தியப் பத்திரிகை.

அந்தப் பையன் என்ன குற்றம் செய்தாலும் அவனைக் கையால் அடிக்க ஒரு உபாத்தியாயரும் துணிய மாட்டார்!

# நாட்டுக்கு ஒரு புதல்வர்



ராகி

## மூன்றாம் பாகம்

அந்த 1920-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் கல்கத்தாவில் ஸ்பெஷல் காங்கிரஸ் நடந்தது. இந்தக் காங்கிரஸில் மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கம் காங்கிரஸ் பிரதிநிதிகளின் தீர்ப்புக்கு வைக்கப்பட்டது. தேசபந்து தாஸ், பண்டித மோதிலால் நேரு, ஸ்ரீ சத்தியமூர்த்தி முதலிய பல வீர சிம்மங்கள் [illegible] பகிஷ்காரத் திட்டத்தை எதிர்த்தார்கள். ஆனாலும் மகாத்மாவின் தீர்மானம் மிகப் பெரும்பான்மை வோட்டுக்களால் நிறைவேறியது. தீர்மானம் நிறைவேறுவதற்கு ஸி. ஆர். ஒரு முக்கிய காரணஸ்தராயிருந்தார்; சென்னையிலிருந்து மகாத்மாவின் கட்சியை ஆதரிப்பதற்காக ஆயிரக்கணக்கான பிரதிநிதிகளை அவர் கல்கத்தாவுக்கு அழைத்துப் போயிருந்தார்.

நவம்பர் மாதத்தில் புதிய சட்ட சபைகளுக்குத் தேர்தல் நடந்தது. கல்கத்தா விசேஷ காங்கிரஸ் தீர்மானத்தின்படி சட்ட சபைத் தேர்தலை வோட்டர்கள் பகிஷ்கரிக்க வேண்டும். அதற்காகத் தமிழ்நாடெங்கும் ஆச்சாரியாரின் முயற்சியினால் வோட்டர்களிடம் "வோட்டுப் போடுவதில்லை" என்று கையெழுத்து வாங்கப்பட்டது. அநேக இடங்களில் வோட்டுப் பெட்டிகள் காலியாகத் திரும்பின. மொத்தத்தில் மாகாணம் முழுவதிலும் சேர்த்து 100-க்கு 15 வோட்டர்கள்தான் வோட்டுப் போட்டார்கள். இவ்வளவு குறைவான வோட்டுகளைப் பெற்றவர்கள் பலர் சட்ட சபைத் தேர்தலில் 'வெற்றி' அடைந்தார்கள். சென்னை மாகாணத்தில் இரட்டை ஆட்சி முறைப்படி ஜஸ்டிஸ் கட்சி மந்திரி சபை ஏற்பட்டது.

1920-ம் வருஷக் கடைசியில் சேலம் ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் தலைமையில் நாகபுரி காங்கிரஸ் நடந்தது. இந்தக் காங்கிரஸில் தலைவர்களுக்குள்ளே ஒற்றுமை ஏற்பட்டு, ஏகமனதாக மகாத்மாவின் ஒத்துழையாமைத் திட்டம் அங்கீகரிக்கப்பட்டது. காங்கிரஸ் மகா சபையின் பொதுக் காரியதரிசிகளில் ஒருவராக ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

• •

இந்தியா தேசத்தின் சரித்திரத்தில் 1921-ம் வருஷம் மிக முக்கியமான வருஷம். அந்த வருஷத்தில் பாரதநாடு நெடுங்காலமாக இழந்திருந்த தன் ஆத்மாவை மீண்டும் பெற்றது. பாரத மக்கள் நெடுங்காலத் துயில் நீங்கிப் புத்துயிர் பெற்று எழுந்தனர்.

வருஷத்துக்கு ஆறு லட்சம் ரூபாய் சம்பாதித்துக் கொண்டிருந்த தேசபந்து தாஸ் தமது வக்கீல் தொழிலை நிறுத்தினார். பண்டித மோதிலால் நேரு முதலிய இன்னும் பல பிரபல வக்கீல்கள் கோர்ட்டு பகிஷ்காரம் செய்தார்கள்.

"ஒரு வருஷத்திற்குள் சுயராஜ்யம்" என்னும் கோஷம் எங்கெங்கும் பரவியது.

ஜூன் மாத முடிவுக்குள்ளே திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடி ரூபாயும் காங்கிரஸுக்கு ஒரு கோடி அங்கத்தினரும்

சேர்க்கவேண்டும் என்றும், இருபது லட்சம் இராட்டைகள் வேலை செய்ய வேண்டுமென்றும் மகாத்மா திட்டம் போட்டார்.

குறிப்பிட்ட தேதிக்குள் திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடி ரூபாய்க்கு மேலே சேர்ந்தது. மற்ற இரண்டு திட்டங்களும் பெரும்பாலும் நிறைவேறின.

அந்த முக்கியமான வருஷத்தில் தமிழ்நாடும் தன்னுடைய கடமையை நிறைவேற்றியது. இதற்கு முக்கிய காரண புருஷராயிருந்தவர் ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார். இரவு பகல் ஓய்வின்றி உழைத்துப் பாடுபட்டார். தமிழ்நாடெங்கும் சகாக்கள் பலர் அவருக்குத் துணை செய்தனர்.

அந்த வருஷத்தில் தமிழ்நாடு ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரின் தனித் தலைமையை ஏற்றுக் கொண்டது என்று சொல்லலாம்.

புதிய காங்கிரஸ் அமைப்பின்படி தேர்தல் நடந்து மாகாண காங்கிரஸ் கமிட்டி கூடிய போது ஸி. ஆர். கமிட்டியின் தலைவராக வேண்டுமென்று அவருடைய சகாக்கள் பலரும் விரும்பினார்கள். ஆயினும் அதை ஸி. ஆர். மறுத்து விட்டார். "நான் எப்படியும் வேலை செய்யப் போகிறேன்; மற்றவர்களை இழுத்துப் போடுவதுதான் முக்கியமானது" என்றார். நீதிபதி டி. வி. சேஷகிரி ஐயரின் சகோதரரான ஸ்ரீ டி. வி. வெங்கட்ராமய்யர் என்னும் பிரபல வக்கீல் மாகாணக் கமிட்டியின் தலைவர் ஆனார். கமிட்டி அங்கத்தினர் எல்லாரும் ராஜாஜியின் சகாக்களாகவே தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். சில காலத்துக்குப் பிறகு ஆரணி சுப்பிரமணிய சாஸ்திரியார் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவரானார்.

1921-ம் வருஷக் கடைசியில் ஆச்சாரியார் வேலூருக்குக் காங்கிரஸ் பிரசாரத்துக்காகச் சென்றார். அவருக்கும் அவருடன் சென்ற ஸ்ரீ ஈ. வே. ராமசாமி நாயக்கர், ஆரணி சுப்பிரமணிய சாஸ்திரியார் ஆகிய மூவருக்கும் 144-வது பிரிவின்படி பொதுக் கூட்டத்தில் பேசக்கூடாது என்று தடை உத்தரவு பிறப்பிக்கப் பட்டது.

ஆச்சாரியார் தடை உத்தரவை மீறிப் பேச உறுதி கொண்டார். சரியான சத்தியாக்கிரஹ தர்மத்தின்படி முன்னாடியே அதிகாரிகளுக்கு எழுதித் தெரிவித்து விட்டுக் குறிப்பிட்ட தேதியில் வேலூர் சென்று சட்டத்தை மீறினார். மூன்று மாதச் சிறை வாச தண்டனை அடைந்தார்.

இவ்விதமாக, சத்தியாக்கிரஹி என்ற முறையில் சட்டத்தை மீறிச் சிறைசெல்லுவதற்கு ஸி. ஆர். தமிழ்நாட்டுக்கு வழி காட்டினார்; இந்தியாவுக்கே வழி காட்டினார் என்று சொல்ல வேண்டும்.

அதற்கு முன்னால் சிறை சென்ற தேச பக்தர்களை இராஜத் துவேஷச் சட்டத்தின் படியோ ஜாமீன் பிரிவுகளின்படியோ சர்க்காரே கைது செய்து சிறைச்சாலைக்கு அனுப்பினார்கள். சாத்வீக சத்தியாக்கிரஹ முறைப்படி முதன் முதலாகச் சட்டத்தை மீறிச் சிறை சென்ற தலைவர் ஸி. ஆர். தான். இதைக் குறித்து மகாத்மாஜி மிக மகிழ்ந்து கடிதம் எழுதினார்.

•　　　•　　　•

மூன்று மாதம் சிறையிலிருந்து விட்டு ஸ்ரீ ஆச்சாரியார் வெளியே வருவதற்குள்ளே தேசத்தில் மிகப் பெரிய சம்பவங்கள் பல நடந்து விட்டன.

1921-ம் வருஷக் கடைசியில் இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின அஸ்திவாரம் ஆட்டம் கொடுத்து அசையத் தொடங்கியது. தேசபந்து தாஸ், அவருடைய தர்ம பத்தினி, பண்டித மோதிலால் நேரு முதலியவர்கள் சட்டத்தை மீறிச் சிறை புகுந்தார்கள்.

இந்தியாவின் வைஸ்ராய் ரெடிங் பிரபு, "என் மனசு குழம்பித் தத்தளிக்கிறது; என்ன செய்வதென்று தெரியவில்லை" என்று பகிரங்கமாகக் கதறினார். காங்கிரஸ் தலைவர்களுடன் ராஜி பேசுவதற்காகத் தூதர்களை அனுப்பினார். சில தலைவர்கள் ராஜியை ஒப்புக்கொண்டு விடலாம் என்று கருதினார்கள். ஆனால் மகாத்மா அதை ஒப்புக்கொள்ள வில்லை. இந்திய ஜனங்கள் தமது சத்தியாக்கிரஹ முறையை நன்கு உணர்ந்துகொண்டு விட்டார்கள் என்றும், பரிபூரண சுதந்திரத்துக்குத் தகுதியாகி விட்டார்கள் என்றும் மகாத்மா காந்தி எண்ணியதுதான் அதற்குக் காரணம். எனவே, அந்த 1922-ம் ஆண்டின் ஆரம்பத்தில் பர்தோலி தாலுக்காவில் வரி கொடா இயக்கத்தை ஆரம்பிப்பதற்கு மகாத்மா ஆயத்தம் செய்யத் தொடங்கினார்.

இந்தச் சமயத்தில் எதிர்பாராத இடி ஒன்று விழுந்தது. ஐக்கிய மாகாணத்தில் சௌரி சௌரா என்னுமிடத்தில் பொது



ஜனங்கள் கட்டு மீறிக் கிளம்பிப் போலீஸ் ஸ்டேஷனைத் தாக்கிச் சில போலீஸ்காரர்களையும் கொன்று விட்டார்கள்.

இதை அறிந்ததும் மகாத்மா காந்தி பெரும் அதிர்ச்சி அடைந்து தாம் ஆரம்பிக்க எண்ணியிருந்த வரிகொடா இயக்கத்தை நிறுத்தி விட்டார். பொது ஜனங்களின் மனோபாவத்தை நன்கு அறிந்து கொள்ளாமல் தாம் 'இமாலயத் தவறு' செய்து விட்டதாகப் பகிரங்கமாய்க் கூறினார்.

இந்தச் சமயம் பார்த்து அந்த மகா புருஷரைக் கைது செய்ய பிரிட்டிஷ் சர்க்கார் முன் வந்தார்கள். கோர்ட் விசாரணை என்னும் கேலிக் கூத்தும் நடந்தது. மகாத்மா காந்தி சிறை புகுந்தார்.

சிறை புகுவதற்கு முன்னால், இந்தியா தேசத்திலேயே தம்முடைய சத்தியாக்கிரகக் கொள்கைகளை நன்கு அறிந்து பின்பற்றுகிறவர் வி. ஆர். தான் என்று மகாத்மா சொல்லி, தமது "யங் இந்தியா" பத்திரிகைக்கு ஆசிரியராக அவரை நியமித்து விட்டுச் சென்றார்.

வி. ஆர் மூன்று மாதச் சிறை வாசத்தை முடித்து வெளியில் வந்ததும் மகாத்மா காந்தியைச் சிறையில் பேட்டி காண்பதற்காகப் போனார். சிறைச்சாலையில் மகாத்மாவைச் சரவர நடத்தவில்லையென்பதைக் கண்டறிந்து, கூரிய அம்பு போன்ற மொழிகளிலே பத்திரிகைகளுக்கு அறிக்கை விடுத்தார். அந்த அறிக்கை பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின் மங்கிப் போன மனச் சாட்சியைக் கூடத் தட்டியெழுப்பியது. ஆச்சாரியார் விடுத்த அறிக்கையின் பயனாக மகாத்மா காந்தியைச் சிறைச்சாலையில் மரியாதையாக நடத்த ஏற்பாடு செய்தார்கள்.

* * *

மகாத்மா காந்தி சிறைப்பட்டிருந்த 1922-ம் ஆண்டின் இறுதியில் பீஹார் மாகாணத்தில் கயை என்னும் நகரில் காங்கிரஸ் மகாசபை கூடிற்று.

அந்தக் காங்கிரஸின்போது அரசியல் வானில் வி. ஆர். நட்சத்திரம் உச்சத்தை அடைந்து ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்தது.

"ஒரு வருஷத்திற்குள் சுயராஜ்யம்" என்று மகாத்மா கூறியது நிறைவேறாத படியாலும், சௌரி சௌராவில் நடந்த ஒரு சம்பவத்துக்காகப் பொதுஜனச் சட்ட மறுப்பு இயக்கத்தை மகாத்மா நிறுத்தி விட்டபடியாலும் காங்கிரஸ் தலைவர்கள் பலர் அதிருப்தி கொண்டிருந்தார்கள். லார்ட் ரெடிங் ராஜிக்கு வர விரும்பிய போது அதை மகாத்மா ஒப்புக் கொள்ளாததும் சிலருக்குப் பிடிக்கவில்லை.

காங்கிரஸ் வாதிகள் சட்ட சபைகளைப் பகிஷ்கரித்த காரணத்தினால் அதிகார

வர்க்கத்தின் தாஸர்கள் சட்ட சபைகளுக்குச் சென்று செய்து வந்த அக்கிரமங்கள் பலருக்கு ஆத்திரத்தை மூட்டின.

ஆகக்கூடி, மகாத்மாவின் ஒத்துழையாமைத் திட்டத்தை மாற்றிப் பழையபடி சட்டசபைகளைக் கைப்பற்றும் திட்டத்துக்குப் போகப் பலரும் விரும்பினார்கள்.

இந்த கோஷ்டிக்குக் கயை காங்கிரஸுக்குத் தலைமை வகித்த தேசபந்து தாஸும், பண்டித மோதிலால் நேரு, ஸ்ரீ வி. ஜே. பட்டேல், ஹக்கீம் அஜ்மல்கான், ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி முதலிய தீரர்களும் தலைமை வகித்தார்கள். தேசபந்து தாஸ் தமது அக்கிராசனப் பிரசங்கத்தில் காங்கிரஸின் வேலைத் திட்டத்தை மாற்ற வேண்டியதின் அவசியத்தைப்பற்றி அழுத்தமாக வற்புறுத்தினார்.

மகாத்மாவிடம் பக்தி கொண்ட மற்றக் காங்கிரஸ் வாதிகள் மகாத்மா சிறையில் இருக்கும்போது அவருடைய திட்டத்தை மாற்ற விரும்பவில்லை. ஆயினும் தேசபந்து தாஸ் போன்ற மாபெருந் தலைவர்களை எப்படி எதிர்த்துச் சமாளிப்பது என்று திகைத்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களுடைய திகைப்பைப் போக்கி, மேற்கூறிய மாபெருந் தலைவர்களை எதிர்த்துச் சமாளிப்பதற்கு ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் முன் வந்தார். கயை காங்கிரஸில் "மாறுதல் வேண்டாத" கோஷ்டிக்கு அவர் தலைமை வகித்தார். திட்டத்தை மாற்ற வேண்டும் என்று கூறிய தலைவர்களின் வாதங்களை யெல்லாம் எதிர்த்துத் தவிடுபொடி யாக்கினார். அவருடைய வாதத் திறமையும் சொல் திறமையும் கயை காங்கிரஸில் குன்றின்மேல் இட்ட தீபத்தைப்போல் பிரகாசித்தன.

"மாறுதல் வேண்டாத"வர்களின் கட்சி கடைசியில் வெற்றி பெற்றது. இந்தக் காங்கிரஸின் போதுதான் ஸி. ஆர். வடநாட்டில் பிரசித்தி பெற்றார். ஸ்ரீ வல்லபாய் படேல், ஸ்ரீ ராஜேந்திரப் பிரஸாத முதலிய உத்தமத் தலைவர்களின் நட்பையும் பெற்றார். கயை காங்கிரஸின்போதுதான் வட நாட்டுத் தலைவர்கள் "இராஜகோபாலாச்சாரியார்" என்னும் நீளமான பெயரை "ராஜாஜி" என்று சுருக்கிக் குறிப்பிடத் தொடங்கினார்கள். அது முதற் கொண்டு வட நாட்டிலும் தென்னாட்டிலும் "ராஜாஜி" என்னும் பெயர் பரவி நிலைத்தது.

கயை காங்கிரஸில் தோல்வி யடைந்த தாஸ், நேரு முதலிய தலைவர்கள் சும்மா இருந்துவிட வில்லை. நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து தேச மக்களிடையே தங்கள் கட்சியை வற்புறுத்திப் பிரசாரம் செய்யத் தொடங்கினார்கள். தியாகிகளும் தீரர்களுமான காங்கிரஸ் தலைவர்களுக்குள்ளே ஏற்பட்ட பிளவு பொது மக்களைப் பெரும் குழப்பத்துக்கு உள்ளாக்கியது.

தேசபந்து தாஸ் தென்னாட்டிலும் சுற்றுப் பிரயாணம் செய்தார். அவருடன் ஸ்ரீ ஏ. ரங்கசாமி ஐயங்காரும் தீரர் சத்தியமூர்த்தியும் சென்றார்கள். தேசபந்து ஆங்கிலத்தில் செய்த சொற்பொழிவுகளை ஸ்ரீ சத்தியமூர்த்தி தமது வாக்கு வன்மையை யெல்லாம் உபயோகித்துத் தமிழ்ப்படுத்தினார். தியாக மூர்த்தியான தேசபந்துவின் கூட்டங்களுக்குத் தமிழ் மக்கள் பெருந்திரளாக வந்தார்கள்; அவருடைய பேச்சுக்களைக் கேட்டார்கள். ஆயினும் புதிய திட்டத்தைப் பெரும்பான்மையோர் ஒப்புக் கொள்ளவில்லை.

இரண்டு வருஷத்துக்குப் பிறகு மகாத்மா காந்தி விடுதலை யடைந்தபோது நாட்டின் நிலையைக் கண்டு வருந்தினார். காங்கிரஸில் ஒற்றுமை நிலவ வேண்டிய அவசியத்தைக் கருதி ஒரு சமரச ஏற்பாட்டைச் செய்தார். அந்த ஏற்பாட்டின்படி சட்ட சபைத் திட்டத்தைக் காங்கிரஸ் ஏற்கா விட்டாலும், "சட்ட சபைக்குப் போக விரும்பும் காங்கிரஸ் வாதிகள் போகலாம்" என்பதாக அநுமதி அளிக்கப்பட்டது.

• • •

காந்தி மகான் விடுதலையானதிலிருந்து ராஜாஜி நிர்மாணத் தொண்டிலும் கிராம சேவையிலும் பூரணமாக ஈடுபடலானார். சேலம் ஜில்லா திருச்செங்கோட்டுக்கு அருகில் புதுப்பாளையம் என்னும் கிராமத்து மிட்டாதார் ஸ்ரீ ரத்தினசபாபதிக் கவுண்டர் ராஜாஜியிடம் மிக்க மரியாதையும் அன்பும் கொண்டவர்களில் ஒருவர். ராஜாஜி கிராமாந்தரப் பிரதேசத்தில் ஆசிரமம் ஸ்தாபிக்க விரும்புகிறார் என்று அறிந்ததும், அதற்கு வேண்டிய நிலம் தாம் அளிப்பதாக முன் வந்தார். சேலம் ஜில்லாவில் பொதுவாக வறண்ட பிரதேசங்களே அதிகம். அதிலும் திருச்செங்கோடு தாலூக்கா மிகவும் மோசமானது. அந்தத் தாலூக்காவில் புதுப்பாளையம் கிராமத்தில் பல ஏக்கரா விஸ்தீரணமுள்ள வளம் மிகுந்த தோட்டம்

ஒன்று ஸ்ரீ ரத்தினசபாபதிக் கவுண்டருக்கு இருந்தது. தென்னை முதலிய பசுமையான மரங்கள் நிறைந்த அந்தத் தோட்டத்தை ஸ்ரீ கவுண்டர் நன்கொடையாக அளித்தார். அதில் ராஜாஜி, காந்தி ஆசிரமத்தை நிறுவினார். ஆரம்பத்தில் ஆசிரமத்தில் கதர்த் தொண்டு மட்டும் நடந்துகொண்டிருந்தது. மகாத்மாவின் விடுதலைக்குப் பிறகு ராஜாஜி ஆசிரமத்துக்கு வந்து மற்றத் தொண்டர்களைப் போலவே தாமும் ஒரு குடிசையில் வசிக்கத் தொடங்கினார். அவருடைய கடைசிக் குமாரன் ஸ்ரீ வி. ஆர். நரசிம்மனும், இளம் புதல்வி ஸ்ரீமதி லக்ஷ்மியும் தந்தையுடன் அதே குடிசையில் வசித்து எளிய வாழ்க்கை நடத்தினார்கள்.

ஆயிரக்கணக்கான மாத வருவாய் சம்பாதித்து நவநாகரிக முறையில் சகல சுகபோக சௌகரியங்களுடனே வாழ்க்கை நடத்திவந்த குடும்பம் திடீரென்று வாழ்க்கை முறையை அடியோடு மாற்றிக் கொண்டு இரண்டே அறைகள் உள்ள சின்னஞ்சிறு குடிசையில் சந்தோஷமாக வசிக்கத் தொடங்கிய சம்பவத்தை நம்முடைய காலத்து அற்புதங்களில் ஒன்றாகவே சொல்ல வேண்டும். இம்மாதிரி அற்புதங்களுக்கு மகாத்மா காந்தியின் ஆத்ம சக்தியைத் தவிர வேறு காரணம் எதுவும் சொல்ல முடியாது.

* * *

ராஜாஜி ஆசிரமத்துக்கு வந்த பிறகு கதர்த் தொண்டோடு மற்ற கிராம சேவைகளையும் காந்தி ஆசிரமம் மேற்கொண்டது. கிராம வாசிகளுக்காக இலவச வைத்திய சாலையும், இராப் பள்ளிக்கூடங்களும், கிராமப் பிரசாரமும் நடந்தன. முக்கியமாக, ராஜாஜி மதுவிலக்குப் பிரசாரத்தில் விசேஷ கவனம் செலுத்தினார். அதற்காகப் பெரிய பெரிய சித்திரக் காட்சிப் படங்கள் தயாரித்தார். சுற்று வட்டாரத்திலுள்ள கிராமங்களுக்குக் கட்டை வண்டியில் மற்ற ஆசிரமத் தொண்டர்களோடு சென்று மதுவிலக்குப் பிரசாரம் செய்தார். இந்தப் பிரசார அநுபவத்திலிருந்து "விமோசனம்" என்னும் மதுவிலக்குப் பத்திரிகை ஆரம்பமாகிப் பத்து மாத காலம் நடந்தது.

ஆசிரம வாழ்க்கையின்போது கிராம வாசிகளின் வறுமை, அறியாமை இவற்றின் காரணமாக எத்தனையோ தொல்லைகள் ஏற்பட்டன. அந்தப் பிரதேசத்தில் ஆசிரமத்தை ஏற்படுத்த ராஜாஜி நிர்மானித்ததற்கு ஒரு முக்கிய காரணம் சில நாளாக அங்கே மழை பெய்யாமல் கிராமவாசிகள் பெருங் கஷ்டத்துக்கு உள்ளாகியிருந்ததேயாகும். அத்தகைய கிராமங்களில் ஆசிரமக் கதர்த் தொண்டின் மூலமாக ஜனங்கள் வேலையும் கூலியும் பெற்று ஓரளவு சுபிட்சம் அடைந்து வந்தார்கள். ஆயினும் குருட்டு நம்பிக்கை மிகப் பொல்லாதது அல்லவா? அதன் பயனாகக் கிராம ஜனங்களிடையே ஆசிரமத்துக்கு விரோதமான கிளர்ச்சி ஏற்பட்டது.

தீண்டாமை விலக்கில் தீவிர உறுதி கொண்ட ராஜாஜி ஆசிரமத்தின் ஆரம்பத்திலேயே இரண்டு ஹரிஜனத் தொண்டர்களை எடுத்துக் கொண்டிருந்தார். மற்றத் தொண்டர்களோடு அவர்களும் சரி சமமாக நடத்தப்பட்டு வந்தார்கள். தனிக் குடும்பங்கள் ஏற்படுவதற்கு முன்னால் எல்லாரும் சேர்ந்து ஒரே பந்தியில் சாப்பிட்டார்கள். இந்த விஷயம் அந்தப் பிரதேசத்துக் கிராமங்களில் பெரும்பான்மையோரான கவுண்டர்களிடையில் பெரும் அதிருப்தியை உண்டாக்கியது. "ஆசிரமத்தில் பார்ப்பார்களும் தீண்டாதார்களும் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிடுகிறார்கள். அதனாலே தான் மழை பெய்ய வில்லை!" என்று சிலர் கதை கட்டி விட்டார்கள்.

ஆசிரமத் தொண்டர் ஒருவர் யோகாசனப் பயிற்சி செய்து வந்தார். அவர் தலைகீழாக நின்று சிரசாஸனம் செய்வதை இராட்டை நூல் கொண்டு வந்த ஒரு பெண்மணி பார்த்து விட்டாள். "ஆசிரமக்காரர்கள் மானத்துக்குக் காலைக் காட்டுகிறார்கள்; அதனாலே தான் மழை பெய்ய வில்லை!" என்று அந்த மூதாட்டி ஒரு கற்பனையைச் செய்து எங்கும் பரப்பினாள்.



ஆசிரமத் தொண்டர்கள் தீவிரமாக மதுவிலக்குப் பிரசாரம் செய்தது கள்ளுக் கடைக்காரர்களுக்கும் சில பெருங் குடியர்களுக்கும் பிடிக்கவில்லை.

ஆகக்கூடி, ஆசிரமத்துக்கு விரோதமான உணர்ச்சி சுற்றுப்புற மெங்கும் பரவியது. "ஆசிரமத்துக்கு யாரும் போகக்கூடாது" என்று கட்டுப்பாடு செய்யும் பிரஸ்தாபமும் ஏற்பட்டது. இதைக் காட்டிலும் நிலைமை இன்னும் மோசமாகி, ஆசிரமத்துக் குடிசைகளைக் கொளுத்திவிடப் போகிறார்கள் என்ற வதந்தியையும் சில துஷ்டர்கள் கட்டி விட்டார்கள்.

இந்த எதிர்ப்புக் கிளர்ச்சி, கட்டுப்பாடு செய்யும் பேச்சு எல்லாம், ராஜாஜி கிராமங்களுக்குச் சென்று கூட்டம் போட்டுப் பேச ஆரம்பித்ததும் மாயமாய் மறைந்து விட்டன. ஏழைக் கிராமவாசிகளிடம் உண்மையான அன்பும் அநுதாபமும் கொண்ட ஆசிரமத் தலைவர் அவர்களுடைய இருதயத்தில் தைக்கும்படியாக அவர்களுடைய சொந்த பாஷையில் பேசினார். தலைவரின் பேச்சைக் கேட்டவர்கள் மோகனாஸ்திரத்தில் கட்டுண்டவர்கள் போல மயங்கிப் போனார்கள். ஏற்கெனவே, 'வக்கீல் ஐயா'விடம் அவர்களுக்கிருந்த பக்தியும் மரியாதையும் பன்மடங்கு ஆயின. ஆசிரமம் செய்து வந்த தொண்டின் பெருமையையும் அவர்கள் உணரத் தொடங்கினார்கள். நாளடைவில் குருட்டு நம்பிக்கைகள் ஒழிந்தன. அந்த வருஷங்களில் ராஜாஜி சேலம் ஜில்லா கிராமங்களில் செய்த பிரசாரந்தான் பின்னால் அவர் பிரதம மந்திரியானபோது சேலம் ஜில்லாவில் முதன் முதலாக மதுவிலக்குச் சட்டம் கொண்டு வருவதற்கு அந்த ஜில்லாவைத் தகுதியாக்கி யிருந்தது.

காந்தி ஆசிரமத்தில் தங்கி ராஜாஜி செய்த தொண்டு சென்னை மாகாணம் முழுவதிலும் நிர்மாண வேலை நன்கு நடைபெறுவதற்குத் தூண்டுகோலாயிற்று. திருப்பூரில் தலைமைக் காரியாலயத்தை ஸ்தாபித்துக் கொண்ட சர்க்கா சங்கம் போட்டி யிட்டுக் கதர் உற்பத்தி செய்தது. தமிழ்நாட்டுச் சர்க்கா சங்கத்தின் பொறுப்பையும் ராஜாஜி தான் ஏற்று நிர்வகித்து வந்தார். கதர் உற்பத்தியில் தமிழ்நாடு அகில இந்தியாவிலும் தலைமை வகித்தது. எல்லாவித நிர்மாணத் தொண்டுகளிலுமே தமிழ்நாடு அந்த நாளில் முன்னணியில் நின்று வந்தது. திறமையான நிர்மாண வேலைக்குக் காந்தி மகாத்மா தமிழ்நாட்டையே உதாரணமாகக் குறிப்பிடத் தொடங்கினர். (தொடரும்)

## மேலும் புதிய டிசைன்களில் இறக்குமதி

★

2200 டிசைன்களில் பட்டு சேலைகள் விலை ரூ. 17/- முதல் 600/- வரை

4000 டிசைன்களில் நூல் சேலைகள் விலை ரூ. 6/- முதல் 60/- வரை

500 டிசைன்களில் பெங்கால் ஸில்க் சேலைகள் விலை ரூ. 30/- முதல் 75/- வரை

★

1948 டிசைன்கள்
ஆகஸ்ட் 15 டிசைன்கள்

★

தர்பார், நேஷனல், அடையார் பார்டர்கள், காஞ்சிபுரம், ஆரணி, பெங்களுர், பெனரஸ், கொள்ளேகாலம் சேலைகள் முதலியன ஸ்பெஷலாக நெய்து வந்து குவிந்திருக்கின்றன.

★

## கஸ்தூரிபாய் கம்பெனி

உயர்தர பட்டு நூல் ஜவுளி வியாபாரிகள்

மேல வீதி :: சிதம்பரம்

## "எவர்ஸில்வர்"

பாத்திரங்கள்

வெள்ளியின் அந்தமும் இரும்பின் உறுதியும் ஒருங்கே கொண்டவை

(பம்பாய் தேவிதயாள் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்டவை)

★

வீடுகளுக்கும் விடுதிகளுக்கும் ஹாஸ்டல்களுக்கும் ஹோட்டல்களுக்கும்

பிரகாசம் தருகின்ற பலபலவிதப் பாத்திரங்கள்

அடுக்குகள், அடுக்குஸெட்டுகள், தட்டுக்கள், தாம்பாளங்கள், டம்ளர்கள், டபராக்கள், கிண்ணங்கள், கரண்டிகள்

ஒரு முறை வந்து பாருங்கள்

சுதேச சமஸ்தானங்கள், இலங்கை உள்பட தென்னிந்தியாவிற்குப் பூரண விநியோகஸ்தர்கள்:

## ஸாம்ஸன் & கோ.

எலெக்ட்ரிக் மோட்டார், பம்பு ஸெட் டீலர்கள்

8/22, பிராட்வே, மதராஸ்

தந்தி: "BARAPASH"] [போன்: 4521

சித்தூர், செங்கல்பட்டு, வட ஆற்காடு, திருநெல்வேலி ஆகிய ஜில்லாக்களுக்கும், சுதேச சமஸ்தானங்கள், இலங்கை ஆகிய இடங்களுக்கும் சப்-டீலர்களாக விரும்புவோர் எழுதவும்.

## சமயத்தில் வேண்டுவது பலசாலியான மனிதரே!

அம்ருதா பல
ஹீனருக்கு
ஓர் வரப்ரஸா
தம். ஜீவ
சக்தி அளிக்
கும் உயர்ந்த
டானிக்

KAE-4

**கேசரி குடீரம் லிட், மதராஸ்**

ஒரிஸ்ஸா, நைஜாம் சமஸ்தானங்கள், ஆந்திர ஜில்லாக்கள் தமிழ் நாடு களுக்கு ஏஜண்டுகள் :

**சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்**

பெர்ஹாம்பூர், செகந்திராபாத்,
பெஜவாடா, மதுரை

## நீங்கள் கவனிக்க வேண்டியது!



குணம் நிறைந்த
கோகுல் கூந்தல்
தைலம்

கூந்தலுக்கு சிறந்த மண
மும் மிகுந்த வளப்பும்
நிறைந்த வளர்ச்சியும் தரு
கிறது ஆயிரக்கணக்கான
மக்கள் அதையே உப
யோகிப்பதன்
உண்மையும்
அதுவே






கோகுல் டிரேட் மார்க் கவனித்து வாங்குங்கள்

**டி. எஸ். ஆர். & கோ**
**கும்பகோணம்**

மதராஸ் ஏஜண்டு :

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைக்ராப்ட்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு :

**B. பாலபட்டாபி,**

வைசியாள் தெரு, கோயமுத்தூர்

# பல்லாண்டு வாழ்க!

[பீம்ப்ளாஸ்—ஆதி].

பல்லவி

பல்லாண்டு பல்லாண்டு வாழ்கவே — இந்தப்
பாரெல்லாம் தமிழரின்
பேரோங்கச் சீரோங்கிப் (பல்லாண்டு)

அநுபல்லவி

நல்லான் சக்ர வர்த்தி ராஜ கோபாலாச்சாரி
நாட்டுக் கொருவன் வழி
காட்டும் காந்தியின் வீரன் (பல்லாண்டு)

சரணம்

உள்ளங்கை நெல்லியைப்போல்
தெள்ளத் தெளிந்த மதி
யூகம் படைத்த புலவன்;
ஊருக் குபகாரமே உயிராக வாழ்ந்தவன்
உவமையிலே தேர்ந்தவன்;
கள்ளரக்கனுடனே தீண்டாமைப் பேயையும்
கட்டுடன் வெட்டியவன்;
காரியத் திறமையால் கவர்னர் ஜெனரலாகிக்
கண்ணான நாட்டுக்குக்
கைபோன்ற கர்ம யோகி (பல்லாண்டு)

— சுவாமி சுத்தானந்த பாரதியார்.

வெண்பா

வாழிய ராஜாஜி வாழ்க அவர்தொண்டு
வாழிய இந்தியா வண்மையொடு — சூழுமியல்
நம்மாட்சி யோங்கி நலம்பெறுக மன்பதைகள்
தம்மாட்சி யோடு தழைத்து.

— தே. கோபால முதலியார்,
தலைவர், செய்யாறு தாலூகா காங்கிரஸ் கமிட்டி,

நேரிசை வெண்பா

வாழிய நம்நாடு வாழி இராஜாஜி
வாழிஎழு பானுண்டா வந்தஇந்நாள் — வாழி
இதுபோல்நா றுண்டுவிழா எய்திநீ ஓங்கும்
மதிபோற் புகழால் மலிந்து.

—திராவிடக் கவிமணி வே. முத்துசாமி ஐயர், பி. ஏ., எல். டி.

# எலியும் கிலியும்

"அருணா"

ஓர் ஊரில் ஒரு எலி இருந்தது. அந்த எலி எப்பொழுதும் எடுத்ததற்கெல்லாம் பயந்து நடுங்கும். இதனால் அது தன் வலையை விட்டு வெளியே இரை தேடித் தின்பதற்குக் கூட வருவதில்லை. ஏனெனில் எந்தப் பூனையாவது தன்னைப் பிடித்து விழுங்கிவிடுமோ என்று அதற்குப் பயம். ஆனால், இப்படி வளைக்குள்ளே எத்தனை நாட்களுக்குத்தான் அது ஒளிந்து கொண்டு வாழ்வது? அதைவிடத் தற்கொலை செய்து கொள்ளலாமா என்று கூட அந்த எலி யோசித்தது. ஆனால் அப்படிச் செய்வதைவிடப் பூனையின் வாயிலேயே அகப்பட்டுக் கொள்ளலாமல்லவா?

ஒருநாள் அந்த எலியின் வளைப் பக்கமாக ஒரு சாமியார் வந்தார். அவருடைய பாதங்களில் விழுந்து, "சுவாமி! நீங்கள் தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்!" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டது எலி.

சாமியாரின் மனம் இளகியது. "உன்னை யாரிடமிருந்து காப்பாற்ற வேண்டும்?" என்று கேட்டார்.

"பூனையிடமிருந்துதான், சுவாமி!" என்றது எலி.

சாமியார் பலமாக யோசித்தார். சடாமுடியை அவிழ்த்துக் கொண்டும் தாடியை உருவிக் கொண்டும் யோசித்தார்; கண்களை இறுக மூடிக் கொண்டும் காதுகளைப் பொத்திக் கொண்டும் யோசித்தார். கடைசியாகத் திருதிருவென்று கண்களை உருட்டி விழித்துக்கொண்டே யோசனை செய்தார். அப்போது பளிச்சென்று ஓர் அருமையான யோசனை அவருக்குத் தோன்றியது.

"பயப்படாதே, குழந்தாய்! உன்னையும் ஒரு பூனையாக்கி விடுகிறேன்!" என்று சொல்லி, அவர் தமது கமண்டலத்திலிருந்த நீர்த்தத்தை எடுத்து அந்த எலியின்மீது தெளித்தார்.

என்ன ஆச்சரியம்! உடனே எலி பூனையாகிவிட்டது. அந்தக் கணமே அது 'கிரீச், கிரீச்' சென்று கத்துவதை விட்டு, 'மியாவ், மியாவ்' என்று கூவ ஆரம்பித்து விட்டது.



கால்களை நீட்டி உடலை வளைத்து ஒரு முறை தன்னை நெளித்துவிட்டுக் கொண்டது. அவ்வளவு தான்; அதற்கு உற்சாகம் தாங்கவில்லை. தன்னைப் பூனையாக்கிய சாமியாரைக் கூட அது மறந்து விட்டு, ஒரே பாய்ச்சலில் எலி வேட்டைக்குக் கிளம்பி விட்டது. சாமியார் தம்முடைய கையைத் தூக்கி அதை ஆசிர்வதித்து விட்டுத் தம் வழியே சென்றார்.



வேட்டைக்குப் போன இடத்தில் ஒரு பெரிய நாய் இந்த 'எலிப் பூனை'யைப் பார்த்தது. அப்பொழுது அந்த நாய் தெருவில் கிடந்த ஒரு எச்சில் இலையை ருசி பார்த்துக் கொண்டிருந்தது. இந்தச் சமயத்தில் தனக்குப் போட்டியாக இன்னொரு நாய் வருவதைப் பார்க்கவே, அது அளவற்ற ஆத்திரங் கொண்டது. உடனே அது உறுமிக் கொண்டும் 'ளொள்' 'ளொள்' என்று குரைத்துக்கொண்டும் எலிப் பூனையைத் துரத்தத் தொடங்கியது.

பாவம்! எலிப் பூனை பயந்து நடுங்கிப்போய் ஓட்டமாய் ஓடியது. ஓடி ஓடிக் கடைசியாகச் சாமியாரிடம் வந்து, "சுவாமி, சுவாமி! என்னைக் காப்பாற்றுங்கள்! வேட்டை நாய் என்னைக் கடிக்க வருகிறது! நான் என்ன செய்வேன்? பழைய எலியாயிருந்தாலும் எந்த வளைக்குள்ளாவது ஒளிந்து கொள்வேன். இப்பொழுது எங்கும் ஒளிந்து கொள்ளக் கூட என்னால் முடியவில்லையே!... ஐயையோ! கிரீச், கிரீச், மியாவ், மியாவ்......!" என்று கதறியது.

சாமியார் சிரித்துக் கொண்டே அதன்மீது மீண்டும் தீர்த்தத்தைத் தெளித்தார். உடனே அது ஒரு நாயாக மாறிவிட்டது.

'எலி நாயை'க் கண்டதும் ஒரு புலி கர்ஜனை செய்து கொண்டு அதைத் துரத்தத் தொடங்கியது. அது பயந்து போய் மீண்டும் சாமியாரிடம் வந்து, "சுவாமி! என்னை ஒரு புலியாக்கி விடுங்கள்!" என்று வேண்டிக் கொண்டது. சாமியார் சிரித்துக் கொண்டே அதை ஒரு புலியாக்கினார்.

'எலிப் புலி'யைப் பார்த்ததும் ஒரு சிங்கம் கோபங் கொண்டு அதைத் துரத்தத் தொடங்கியது.

'எலிப் புலி' பயந்து நடுங்கிப் போய் மறுபடியும் சாமியாரிடம் வந்து, "சுவாமி, சுவாமி! என்னைச் சிங்கமாக்கிவிட மாட்டீர்களா?" என்று கெஞ்சியது.

இந்தத் தடவை சாமியாருக்கு அசாத்திய கோபம் வந்து விட்டது. "பயங்காங்கொள்ளியாக இருக்கும் நீ எந்த ஜன்மத்துக்கும் லாயக்கில்லை! நீ சிங்கமானாலும் சரி, புலியானாலும் சரி, உன்னுடைய நெஞ்சு எலியின் நெஞ்சு போலவேதான் கோழையாயிருக்கும்!" என்று சொல்லி அவர் தம் கமண்டலத்திலிருந்த, தீர்த்தத்தை எடுத்துக் கோபத்துடன் அதன் மீது தெளித்தார்.

இம் முறை எலிப் புலி சிங்கமாகவில்லை; பழையபடி சின்னஞ்சிறு சுண்டெலியாக மாறிவிட்டது!

அவ்வளவுதான்; அவமானத்துடன் அந்தச் சுண்டெலி 'கிரீச், கிரீச்' என்று கத்திக்கொண்டே, பழையபடி தன் வளைக்குள் ஓடி ஒளிந்து கொண்டது.

# இது ஒரு ஸோப் அன்றி

## மாயமல்லா ?

உள்ளதை உள்ளபடி சொல்லுகிறோம். இவ்விளம்பரத்தின் மூலம் நாங்கள் விற்க விரும்புவதெல்லாம் எளியோர் பணக்காரர் யாவருக்கும் கிட்டக்கூடிய ஓர் உயர்தரஸ்தான ஸோப். காந்தி ஸோப் உங்களுக்கு அழகு சிருங்காரம் முதலியவற்றை உண்டாக்குமென்று நாங்கள் வாக்குறுதி கொடுக்கவில்லை.

ஆனால் காந்தி ஸோப் பரிமளம் பொருந்தியது என்றும் மிருதுவான சருமத்துக்கு கெடுதலை உண்டாக்காது என்றும் உறுதி சொல்லுவோம்.

இதர உயர்தர ஸ்வஸ்திக் தயாரிப்புகள். சீக்காய்ஸோப், பரிமள ஆமணக்கெண்ணெ, ஸ்வஸ்திக் கூவர ஸோப், சலவை ஸோப்புகள், கோவாலின் பிராண்ட் வனஸ்பதி முதலியன.




## காந்தி ஸோப்

குணத்துக்கு நிகரற்றது.

Sem. 16—Tamil

SHILPI

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட் பம்பாய்.

# ராஜாஜியும் டி.கே.சி.யும்

எஸ். வி. எஸ்.



"ராஜாஜி, கம்பருக்கு விளக்கம் தருவதுபோல் வேறு யாரும் எனக்கு விளக்கம் தருவதில்லை. ராஜாஜியுடன் பழகிய பின்னர்தான் கம்பர் வகுத்திருக்கும் ராமனை நான் கண்ணுக் கறிந்து கொள்ள முடிந்தது" என்று டி. கே. சி. அவர்கள் அடிக்கடி சொல்லுவார்கள்.

ஒரு சமயம் (சுமார் பத்து வருஷங்களுக்கு முன்) குற்றாலத்துக்கு ராஜாஜியும் மற்றும் சில அந்தியந்த நண்பர்களும் டி. கே. சி.யின் அதிதிகளாகச் சென்றிருந்தனர். அருவியில் குளிக்கும்போது குறவஞ்சி ஆசிரியரும் குளிக்க வந்துவிடுவார். மலை ஏறும்போது கம்பர் வருவார் துணைக்கு. இப்படி இலக்கியப் பேச்சுகள் நடந்தபோது, ஒருநாள் கம்பராமாயணத்தில் அயோத்தியா காண்டத்திலிருந்து டி. கே. சி. ஒரு காட்சியைப் படித்தார்.

ராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆக வேண்டியநாள். ராமனை வரச் சொல்லி, தசரதன் பணித்ததாகச் செய்தி வந்தது. கைகேயியினுடைய அரண்மனையை நோக்கி, ராமன் தேரில் போகிறான். அப்பொழுது அவனைக் கண்ட ஊர் ஜனங்கள் அன்பும் ஆவலும் நிரம்பிய கண்களுடன் பார்க்கிறார்கள். அவர்களில் சிலர், "கருணை மிக்க இந்த ராமனின் மனசை நினைத்தால், முதலையினிடம் அகப்பட்டு 'ஆதிமூலமே' என்று யானை அரற்றியபோது அதைக் காக்க வந்த நாராயணனின் கருணையோடுதான் ராமனையும் ஒப்பிட்டு எண்ண வேண்டியிருக்கிறது" என்று எண்ணுகிறார்கள்.

வாரணம் அரற்ற வந்து
கராவுயிர் மாற்றும் நேமி
நாரணன் ஒக்கும் இந்த
நம்பிதன் கருணை என்பார்
ஆரணம் அறிந்தத்தேற்று
ஐயனை அணுகநோக்கி,
காரணம் இன்றியேயும்
கண்கணீர் கலுழ நிற்பார்.

[வாரணம்: கஜேந்திரன் எனப்படும் யானை; கரா உயிர்: முதலையின் உயிர்; நேமி: சக்கராயுதம்; நம்பி: ராமன்; ஆரணம்: வேதங்கள்; கலுழ: சொரிய.]

"இந்த ராமனுக்கு இன்னும் கொஞ்ச நேரத்தில் பட்டாபிஷேகம் ஆகப் போகிறது. சக்கரவர்த்தியாகப் போகிறவனுக்குக் கொஞ்சமாவது மிடுக்கோ, கர்வமோ இல்லை. அதற்கு மாறாகப் பாமரராகிய நம்மிடமெல்லாம் எவ்வளவு அன்பும் பரிவும் காட்டுகிறான்!" என்றெல்லாம் நினைத்தபோது, ஊர் ஜனங்களின் கண்களில் கண்ணீர் வந்து விட்டதாம். அவர்களுக்கே தம் கண்களில் கண்ணீர் வருவதன் காரணம் தெரியவில்லையாம்.

காரணம் இன்றியேயும்
கண்கணீர் கலுழ நிற்பார்

என்கிறார் கவிஞர்.

டி. கே. சி. இந்தப் பாட்டைச் சொல்லி நிறுத்தியவுடன் ராஜாஜி தமக்கு ஒரு சம்பவம் ஞாபகம் வருவதாகச் சொன்னார்.

ராஜாஜி தாம் மிகவும் வெற்றிகரமாகப் புரிந்து வந்த வக்கீல் தொழிலை விட்டு, தேச சேவையில் ஈடுபட்ட சமயம். வக்கீல் தொழிலில் தம் மேதையைக் காட்டி ராஜாஜி பொது ஜனங்களின் பேராதரவுக்கும் அன்புக்கும் பாத்திரமாகியிருந்தார்.

இப்படிப் பெயரும் புகழும் பெற்று வந்த ராஜாஜி, தமக்குச் செல்வத்தையும் புகழையும் தேடித் தந்த வக்கீல் தொழிலை விட்டுத் தேசப் பணியில் ஈடுபட்டார். ஊர் ஊராகச்

சென்று காங்கிரஸ் பிரசாரமும், மதுவிலக்குப் பிரசாரமும் செய்து வந்தார்.

சேலம் ஜில்லாவில் ஏதோ ஒரு ஊரில் பிரசங்கம் செய்து விட்டுக் காரில் திரும்பி வந்த போது, ஒரு இடத்தில் கார் நின்றது. தொண்டு கிழவர் ஒருவர், ராஜாஜிக்கு நன்றாகத் தெரிந்தவர், காரில் ராஜாஜி இருப்பதைப் பார்த்துவிட்டுக் கார் அருகில் வந்தாராம். கதவின்மேல் கையை ஊன்றிக்கொண்டு, "என்ன, ராஜகோபாலா?" என்றாராம். அதற்குமேல் வார்த்தை வரவில்லை. நாத் தழுதழுத்தது. அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் முத்து முத்தாக வந்து விட்டது.



"அந்தக் கிழவருக்கு நான் தொழில் புரிந்ததும் அதனால் பெற்றுவந்த வருமானமும் தெரியும். அத்துடன் என் குணத்தையும் அறிந்திருந்தார். அதனால் நான் காங்கிரஸில் சேர்ந்து, இம்மாதிரி ஊர் ஊராகத் திரிவது பற்றி, சிலரைப் போல் என்மேல் வருத்தமோ கோபமோ கொள்ள முடியவில்லை. ஆனாலும் அவர் கண்களில் கண்ணீர் வந்து விட்டது. 'எப்படியிருந்தவன் இன்று எப்படியாகி விட்டான்!' என்று அவர் எண்ணியிருக்க வேண்டும். அவருக்கே காரணம் தெரியாமல் கண்ணீர் உகுத்து விட்டது. அப்போது தான் அவர் என்மேல் எவ்வளவு அன்பு வைத்திருக்கிறார் என்று தெரிய வந்தது! இன்று நீங்கள்,

காரணம் இன்றியே யும்
கண்கள்நீர் சுரந்திடும் பார்

என்றதும் அந்தச் சம்பவம் ஞாபகம் வருகிறது" என்றார் ராஜாஜி.

அன்று முதல் டி. கே. சி. 'வாரணம் அரற்றவந்து' என்ற பாடலைச் சொல்லும் போதெல்லாம் மேற்படி சம்பவத்தைப் பற்றிச் சொல்லாமலிருப்பதில்லை.

---

# தமிழர் மானம் மீட்டிய தமிழன்



சார்ந்த நாட்டைக் காக்கவந்த தலைவனென்று போற்றுவோம்;
தரணியெல்லாம் தலைநிமிர்ந்து தமிழனென்று கூறுவோம்!
தமிழனென்று சொன்னபோது தலைகுனிந்து வெட்கிய
தணிந்த சொல்லைக் கேட்ட நாளும் மறைந்ததென்று சொல்லுவோம்.
பதட்டம்கொண்டு செய்தசெய்கை பலனுமெத்தத் தந்தது;
பாருக்குள்ளே தமிழன்நாமம் பலதிசையும் சென்றது!
வாழ்க்கை யாவும் நேர்மைகாட்டும் வழியைப்பற்றிச் சென்றதால்
வான்புகழும் வங்கநாட்டுக் கவர்னராக்கித் தந்தது!
தீண்டாமையும் தீயகள்ளும் ஒதுங்கிநின்று மறைந்திட
டெல்லியில் முதல்தமிழன் கவர்னர்ஜெனரலாகிட
எட்டுத்திசையும் நமதுபுகழ் என்றும்ஓங்கி நிலைத்திட
ஏலநாட்டு மக்கள்முன் தமிழர்பெருமை உயர்ந்திட
மக்கள்யாரும் சமமென்னும் மந்திரத்தை ஓதிய
மாமதிக்க மனிதராக வாழ்வாய் இந்த நாட்டிலே!

— வே. செல்லையன், தலைவர், பாரதி இளைஞர் சங்கம், திருநெல்வேலி டவுன்.

# ராஜாஜி ஹால்



சென்னை அரசாங்க மாளிகையில் உள்ள 'பாங்க்வெட்டிங்' ஹாலில் இம் மாதம் 10உ. 14உகளில் ராஜாஜி பிறந்த திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. 14உ யன்று மேற்படி ஹாலுக்கு ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரியார் 'ராஜாஜி ஹால்' என்று நாமகரணம் செய்ததை மந்திரிமார்களும் சபையோரும் உற்சாகமாக ஆமோதித்து உறுதிப்படுத்தினார்கள்.



திருவல்லிக்கேணியில் அலங்கரித்த யானை மீது ராஜாஜி படத்தை வைத்து ஊர்வலம் விட்டார்கள். யானைக்கு முன்னணியில் ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை, ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரி முதலிய ராஜாஜி பக்தர்கள் சென்றார்கள்.



புது டில்லியிலே நடந்த ராஜாஜி பிறந்த தினக் கொண்டாட்டத்தில் ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் ராஜாஜி படத்தைத் திறந்து வைத்தார். குமார ராஜா முத்தையாச் செட்டியார், பெடரல் கோர்ட் நீதிபதி ஸ்ரீ பதஞ்சலி சாஸ்திரி, ஸ்ரீ வி. ஐ. முனிசாமிப் பிள்ளை, ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி பாரதி ஆகியவர்கள் விஜயம் செய்திருந்தார்கள்.





11-ம. காலையில் ராஜாஜி பிறந்த தின வைபவத்தை முன்னிட்டுச் சபா நாயகர் கனம் ஜே. ஷெண்முகம் பிள்ளை அவர்களின் மேற்பார்வையில் பல இடங்களில் ஹரிஜனக் குழந்தைகளுக்குப் பால் விநியோகம் செய்யப்பட்டது.





—சந்திரா—







ராஜாஜி ஜன்ம தின உற்சவம் இவ்வளவு சிறப்பாக நடைபெற்றதற்கு மூல காரண புருஷரான ஷெரீப் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு புரசைவாக்கத்தில் ராஜாஜியின் உண்மையான அன்பர்கள் அடங்கிய பொதுக் கூட்டத்தில் ராஜாஜியின் படத்தைத் திறந்து வைத்தார்.

*மீனாக்ஷி :
மலர் மங்கை— கோமளவதனி.

# என்னே *அவளது எழில்! அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிறாள்!

...நீங்களும் பாண்ட்ஸ் உபயோகித்து உங்கள் வதனத்தை புதுமலர் காந்திபோல விளங்கச் செய்வதுண்டா? எவ்விலையிலுமுள்ள வேறெந்த க்ரீம்களையும் விட பாண்ட்ஸையே எழில் மடந்தையர்கள், சிறுமிகள் அதிகமாக உபயோகிக்கின்றனர். உங்கள் சருமத்திற்கு உங்களால் முடியும் மிக முக்கிய பராமரிப்பு, அதை செம்மையாகச் சுத்தம் செய்வதே யென்பது ஞாபக மிருக்கட்டும். இன்றையிலிருந்தே பாண்ட்ஸ் உபயோகிக்கத் தொடங்குங்கள்.

பாண்ட்ஸ்

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்




**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:** தினம் இரண்டு வேளை விரல் நுனிகளால் கோல்ட் க்ரீம் மெதுவாகத் தடவி, முகத்தை செம்மையாகச் சுத்தம் செய்யுங்கள். பாண்ட்ஸ் டிஷ்யூவால் துடைத்துக் களையவும்.




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்:** பிறகு வானிஷிங் க்ரீம் தடவுங்கள். அது சருமத்தினுள் மறைகிறது - சருமத்திற்கு பாதுகாப்பளிக்கிறது.



**பாண்ட்ஸ் பௌடர்:** பின்னர் வேண்டுமானால் கொஞ்சம் பௌடரும் தடவிக் கொள்ளுங்கள். முகம் பூவிதழ்போன்று மோகன காந்தியுடன் விளங்கும்.

வியாபார விவரங்களுக்கு:
எல். டி. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய்-கல்கத்தா-கராச்சி-சென்னை.



# இரு சகோதரிகள்

அக்ஷயம்

"ஏண்டி, இன்னிக்கே கடைத் தெருவுக்குப் போய்விட்டு வந்து விடுவோமே!" என்றார் சபேசய்யர் தம் மனைவியைப் பார்த்து.

"ஆமாம், மாப்பிள்ளையிட்ட இருந்து கடிதாசி வந்து விட்டதோ?" என்று கேட்டாள் அவருடைய மனைவி மங்களம்.

"வந்துவிட்டது; அதனால்தான் போய்விட்டு வந்துவிடுவோமே என்கிறேன்."

"சரி, போய்விட்டு வந்தால் போச்சு!"

"லக்ஷ்மியையும் தயாராக இருக்கச் சொல்லு."

"சொல்லுகிறேன்....பாவம், அது தான் ஆம்படையானோடு இருந்து வாழக் கொடுத்து வைக்கவில்லை......"

"என்ன செய்வது! நாம் செய்த பூஜா பலன் அப்படி! அதற்கு யார் என்ன செய்ய முடியும்?"

"என்ன இருந்தாலும் இரண்டு மாப்பிள்ளையும் சேர்ந்து தீபாவளிக்கு வந்து கொண்டாடக் கொடுத்துவைக்கவில்லையே என்றுதான் இருக்கிறது!"

"ஹும், இன்னிக்கு ஆறு வருஷமாச்சு. எங்கே இருக்கிறானோ, தெரியவில்லை. ஒரு கடிதாசிகூடக் கிடையாது."

"நாமாவது இன்னொரு மாப்பிள்ளையைக் கொண்டு திருப்தி அடைகிறோம். அவள்......"

"அவள் பேரில் நான் பாதி சொத்தை எழுதி வைத்துவிடலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன். நம்மாலே அவளுக்குப் புருஷனோடு வாழும் சுகத்தைத்தான் அளிக்க முடியாது; மற்ற சுகங்களையாவது நாம் அளிக்கலா மல்லவா?"

இம்மாதிரி தாயும் தந்தையும் பேசிக்கொண்டிருப்பது, அடுத்த அறையில் ஏதோ படித்துக் கொண்டிருந்த லக்ஷ்மியின் காதுகளில் ஒலித்தது. அப்புறம் அவளுக்குப் படிக்கவே ஓடவில்லை. புஸ்தகத்தை மேஜையின்மீது விட்டெறிந்து விட்டுக் கண்களை இறுக மூடிக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தாள்.

* * *

லக்ஷ்மிக்குக் கல்யாணம் ஆகி இன்று ஆறு வருஷங்களுக்கு மேல் ஆகிறது. விசாலத்திற்கும் அவளுக்கும் சேர்ந்தே தான் கல்யாணம் நடந்தது. கல்யாணத்தின் பொழுது லக்ஷ்மிக்குப் பதினேழு வயது; விசாலத்திற்குப் பதினைந்து. மாப்பிள்ளைகளிருவரும் கிட்டத்தட்ட ஒரே வயதினர். இருபத்தைந்துக்குமேல் இராது. இருவரும் நல்ல குடும்பத்தினர்தாம். பூர்வீகச் சொத்திலும் ஒருவருக்கு ஒருவர் சளைத்திருக்கவில்லை. படிப்பிலும் ஒருவருக்கொருவர் ஏற்றத் தாழ்வு இல்லை. இருவருமே பி. ஏ. பட்டம் பெற்றவர்கள். ஆனால் ஒரே ஒரு வித்தியாசம் என்னவென்றால், லக்ஷ்மிக்குக் கணவனாக வாய்த்த சோமு வேலையில் இல்லை; விசாலத்தின் கணவன் ராமு கல்லூரிப் படிப்பு முடிந்ததும் தனக்கென ஒரு உத்தியோகம் தேடிக் கொண்டு விட்டான்.

கல்யாணத்தில் சோமுவுக்குச் சற்றுக் குறைவாகவும், ராமுவுக்குச் சிறிது அதிகமாகவும் வரதக்ஷிணை கிடைத்தது. அதோடு மட்டும் அல்ல, கல்யாணம் ஆகி இரண்டு மாதங்களுக்குப் பிறகு நடந்த ஆடி, ஆறு மாசம் முதலிய விசேஷங்களிலும் கூட, சீர்வகைகளில் சிறு மாறுபாடுகள் இல்லாமற் போகவில்லை.

இந்தச் சிறு வித்தியாசமானது, சோமுவின் தாயினுடைய உள்ளத்தில், 'உத்தி

யோகத்தில் உள்ள மாப்பிள்ளை, உத்தியோகத்தில் இல்லாத மாப்பிள்ளை என்ற பாகுபாடு வகுக்கப்பட்டிருக்கிறது' என்ற சந்தேகத்தைத் தட்டி எழுப்பி விட்டது. அதனால் அவளுக்குத் தன் சம்பந்திகளிடத்தில் சிறிது கோபம்தான். இருந்தாலும் அவள் அந்தக் கோபத்தையே வெளிக் காட்டிக் கொள்ளவில்லை.

"என் சோமு, உன் வேட்டகத்திலே செய்கிற காரியத்தைக் கவனித்தாயோ, இல்லையோ! உனக்கு ஒன்று; அவனுக்கு ஒன்று. இது எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை" என்று சோமுவின் தாயார் ஒரு நாள் ஆரம்பித்தாள்.

"அவரவர் இஷ்டம்தானே, அம்மா!"

"அவரவர் இஷ்டமாவது! நன்றாயிருக்கிறதே, நீ சொல்லுகிறது! நாம் அந்தப் பிள்ளையைக் காட்டிலும் சொத்திலே குறைச்சலா, சுதந்திரத்திலே குறைச்சலா? எதிலே குறைச்சல்! எதற்காக நம்மை அவர்கள் இப்படி அவமானப்படுத்த வேண்டும்?"

"அந்த மாப்பிள்ளை உத்தியோகம் பார்க்கிறான்; இந்த மாப்பிள்ளை வேலை வெட்டி ஒன்றும் இல்லாமல் வீட்டிலே உட்கார்ந்திருக்கிறான், அதனாலேதான்!"

"அப்படியானால் நான் சொல்கிறதைக் கேளு. நீயும் ஒரு உத்தியோகத்தைத் தேடிக் கொள்ளு."

"ஏனம்மா, நான் எதற்காக ஒருத்தன் கீழே கைகட்டிச் சேவகம் புரிய வேண்டும்? எனக்குச் சோற்றுக்கு இல்லையா என்ன?"

"அதற்குச் சொல்லவில்லையடா! அவர்கள் அகௌரவமாக நடத்தாமல் இருக்கிறார்களா என்று பார்க்கணும். நீ தீபாவளிக்கு முன்னால் ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்து கொள்."

"அப்படியே பார்த்துக் கொள்கிறேன், அம்மா!" என்றான் சோமு.

இப்படியே தாயார் வேலை பார்த்துக் கொள்ளும்படி தூண்டும் பொழுதெல்லாம் சோமு, "ஆகட்டும், அம்மா!" என்று கூறி, விஷயத்தை ஆறப்போட்டு வந்தான்.

ஒரு நாள் லக்ஷ்மியிடமிருந்து, "நீங்கள் ஏதாவது ஒரு உத்தியோகத்துக்குப் போகக் கூடாதா? ஏன் போகாமல் இருக்கிறீர்கள்? இங்கே அம்மாவும் அப்பாவும் கூட 'இவ்வளவு படித்துவிட்டுச் சும்மா உட்கார்ந்திருப்பானேன்! ஏதாவது வேலைக்குப் போகக் கூடாதோ?' என்றுதான் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அங்கே உங்கள் அம்மாவும் நீங்கள் ஏதாவது வேலை பார்க்க வேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறாராம். எனக்கும் நீங்கள் ஏதாவது வேலையில் இருந்து பார்க்க வேண்டும் என்று ஆசையாயிருக்கிறது. சீக்கிரம் ஏதாவது ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்து கொள்ளுங்கள். தீபாவளிக்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்னாலேயே வந்து விடுங்கள்" என்று ஒரு கடிதம் வந்திருந்தது.

'இதேதடா, இது! தாய் தந்தை, மாமனார் மாமியார், மனைவி, ஊர் - உலகம் எல்லாமே வேலை பார்க்கும்படி தூண்டுகிறதே! உத்தியோகம் பார்த்துத்தான் ஆகவேண்டும் போலிருக்கிறது!' என்ற எண்ணம் சிறிது சிறிதாகச் சோமுவின் உள்ளத்தில் வேரூன்றலாயிற்று.

ஆகவே ஒருநாள் சோமு தனது யோக்யதாம்சங்களை விவரித்து ராணுவ இலாகாவுக்கு மனுப்போட்டான். ராணுவ இலாகாவில் வேலைக்குப் பஞ்சமா என்ன! உடனே, 'லெப்டினண்ட்' பயிற்சியில் சேரும்படி அவனுக்கு அனுமதி கிடைத்துவிட்டது. ஆகவே அவன் 'மகோ'வுக்குப் போவதற்கு ஆயத்தமானான். தாய் - தந்தை, மாமனார் - மாமியார் அனைவரும் 'இந்த உத்தியோகம் வேண்டாம்' என்று எவ்வளவோ தடுத்துப் பார்த்தனர். ஆனால் அவர்களுடைய வார்த்தைக்கு அவன் சிறிதும் செவி சாய்க்கவில்லை. "இவ்வளவு நாள் 'வேலை பார், வேலை பார்' என்று என்னைப் பாடாய்ப் படுத்தினீர்கள்; வேலை கிடைத்ததும் வேண்டாம் என்கிறீர்கள்! வேலை இல்லையேல் கௌரவமில்லை. நான் வேலைக்குப் போகத்தான் போகிறேன். உங்கள் சொல்லைக் கேட்கப் போவதில்லை!" என்று கூறி அவன் 'மகோ'விற்குப் புறப்பட்டு விட்டான்.

அதே வருஷம் அவனுக்குத் தலை தீபாவளி நடப்பதாயிருந்தது. பத்துத் தினங்களுக்கு முன்பே அழைப்பிதழும் வந்து விட்டது. தீபாவளிக்குப் புறப்படத் தயாரானான். ஆனால் முதல் தினமே, 'அவன் பயிற்சியில் தேறி விட்டதாகவும் உடனே எகிப்துக்குப் புறப்பட்டுப் போக வேண்டும்' என்றும் உத்தரவு வந்து விட்டது. என்ன செய்வான் பாவம்! தலை தீபாவளிப் பிரயாணத்தை நிறுத்திவிட்டு எகிப்துக்குப் பிரயாணமானான். பிரயாண அவசரத்தில் 'தீபாவளிக்கு வரப்போவதில்லை' என்று தன் வேட்டகத்துக்கு எழுதிய கடிதத்தில், விலாசம் எழுத

மறந்து, தபாலில் சேர்த்து விட்டான். அந்த விலாசம் இல்லாத கடிதம் என்ன வாயிற்றோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்!

எகிப்து சென்றபின் அவனுடைய வாழ்க்கையில் பலவித மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. அதன் பலனாகத் தன் வீட்டு ஞாபகமே யில்லாமல், அவனுடைய ஆறு வருஷகால வாழ்க்கை ஓடி மறைந்து விட்டது.

2

லக்ஷ்மியின் தாய்—தந்தை அவளுக்கு ஆனந்தம் அளிக்கும் விஷயத்தில் எவ்விதக் குறையும் வைக்கவில்லை. படிப்பதற்கு ஏராளமான நாவல்கள், பத்திரிகைகள் முதலியன தருவித்துக் கொடுத்தனர்.

லக்ஷ்மியும் அவைகளைப் படிப்பதில் தன் மனதை ஈடுபடுத்தி, மனத்துயரை ஒருவாறு குறைக்க முயன்றாள். பத்திரிகைகளில் வெளிவரும் பெண் மனம், உள்ளக் கிளர்ச்சி சம்பந்தமான கதைகளைப் படிக்கும் பொழுது, அவளுடைய மனம் அலைபாயும். தீபாவளி சமயத்தில் வெளியாகும் தீபாவளி மலர்களில் வரும் கதைகள், 'தன் வாழ்க்கையிலும் இந்த இனிய காட்சிகள் அனுபவிக்கக் கிடைக்கவில்லையே!' என அவளை ஏங்கச் செய்யும்.

வருஷா வருஷம் தீபாவளி வரும். ராமுவும் விசாலமும் தவறாமல் தீபாவளிக்கு வருவார்கள். லக்ஷ்மிக்குத் தன் தாய் வீட்டைத் தவிர வேறு புகலிடம் ஏது? எப்பொழுதும் அவளுக்குத் தன் தாய் வீடுதானே கதி! விசாலமும் ராமுவும் கூடிக் குலாவிப் பேசிச் சிரிப்பது அவளுக்குச் சிறிதும் பிடிக்காது. "இந்த விசாலமும் ஒரு பெண் மாதிரி! என்ன பேச்சு! என்ன சிரிப்பு! வெட்கம், மானம் ஒரு, சரிவர இருந்தால்தானே! அறுபது நாழிகையும் ஆம்படையானையே சுற்றிக் கொண்டு அலைகிறது! இரண்டு காரியம் செய்தால் இவளுக்கு என்ன கேடு!" என்று விசாலத்திடம் ஒரு சமயம் வெறுப்பு உதிக்கும்.

விசாலமும் ராமுவும் தனிமையில் பேசிக் கொண்டிருப்பதைக் காணும் பொழுது, "இவர்களைப்போல நானும் ஆம்படையானோடு இருந்து வாழக் கொடுத்து வைக்கவில்லையே! அவர் இன்



றைக்கு வந்திருந்தால் நானும் இப்படித் தானே பேசிக் கொண்டிருந்திருப்பேன்? 'அம்மா, அவருக்குக் காப்பி கொடுத்து விட்டு வருகிறேன்; வெந்நீர் வேண்டுமாம், கொடுத்துவிட்டு வருகிறேன்; ஸ்நானம் செய்ய வரச் சொல்லி விட்டு வருகிறேன்' என்று இதுமாதிரி ஏதாவது ஒரு சாக்குச் சொல்லி நானும் அவரிடம் பேசப் போய்விட மாட்டேனா? அதற்கெல்லாம்தான் இந்தப் பாழும் ஜன்மம் கொடுத்து வைக்கவில்லையே!' என்று தன்னையே நொந்துகொள்வாள் இன்னொரு சமயம்.

போன வருஷம்கூடத் தீபாவளிக்கு விசாலம் வந்திருந்தாள். அப்பொழுது அவள் பிள்ளைத்தாய்ச்சி. தன்னுடைய கணவனுக்குக் காப்பி எடுத்துக் கொண்டு மேலே வந்தாள். அதற்கு முன்பே லக்ஷ்மி புடவை உலர்த்துவதற்காக மாடிக்குப் போயிருந்தாள். லக்ஷ்மி உயரப் போயிருக்கிறாள் என்று விசாலத்திற்குத் தெரியாது. ராமுவும் கவனிக்கவில்லை.

“இந்தாருங்கோன்னா! எழுந்திருந்து காப்பி சாப்பிடுங்கோ!” என்றாள் விசாலம்.

“அதற்குள்ளேயா! மணி இரண்டரை ஆகவில்லையே! பிறந்தாத்திலே வந்த ஆத்துக்காரரை ரொம்பக் கவனிக்கிறது போலக் காட்டிக் கொள்கிறாயே!”

“என்னா, என்றைக்கு உங்களை நான் கவனிக்கவில்லை? நன்றாயிருக்கிறது!”

“இந்த வருஷம் நன்றாகக் கவனித்துக் கொண்டு விடுவாய். அடுத்த வருஷம்...!”

“அடுத்த வருஷம் என்ன?”

“உன் பிள்ளையைக் கவனித்துக் கொள்ளத்தான் உனக்குப் பொழுது சரியாயிருக்கும். என்னை ஏன் என்றுகூடக் கேட்க மாட்டாய்!”

“என்னன்னா, பரிகாசம் வேண்டிக் கிடக்கிறது!”

“அதற்குச் சொல்லவில்லையடி!”

“போதும், நீங்கள் காப்பியைச் சாப்பிடுங்கோ!”

ராமுவும் விசாலமும் இப்படிப் பரிகாசப் பேச்சுப் பேசிக் கொண்டிருந்ததை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த லக்ஷ்மியின் மனம் 'இந்த பாக்கியம் நமக்கு எப்போது கிடைக்குமோ?' என்று பொருமியது.

அவள் பேசாமல் கீழே இறங்கி வந்து விட்டாள்.

## 3

தீபாவளிக்கு ஒரு மாதம் இருந்தது. ஒருநாள் மாலை ராணுவ இலாகாவில் வேலை பார்த்து வந்த சீனிவாசன், லக்ஷ்மியின் வீட்டுக்கு வந்திருந்தான். லக்ஷ்மி சங்கோசமின்றி அவனுடன் தாராளமாகப் பேசிப் பழகுவது உண்டு.

“என் சீனு, நீதான் மிலிட்டிரி ஆபீஸிலே வேலை பார்க்கிறாயே, அவர் எங்கே இருக்கிறார் என்று சற்று விசாரித்துச் சொல்லக் கூடாதோ? உன்னிடம் சொல்லணும் என்கிறது. ஆனால் வெட்கமாயிருந்தது. ஆசையை அடக்க முடியாமல் இன்னிக்கு உன்னிடம் சொல்றேன், அப்பா!” என்றாள் லக்ஷ்மி.

“எங்கள் ஆபீசர் மூலமாக விசாரித்துப் பார்க்கிறேன்” என்றான் சீனு.

“என்னவோ, சீனு! அவர் எங்கே இருந்தாலும் ஒரு தடவை வந்து விட்டுப் போகும்படிச் செய்தால் உனக்குக் கோடி புண்ணியமுண்டு.”

“பார்க்கிறேன், லக்ஷ்மி!” என்று கூறி அன்று சீனிவாசன் விடை பெற்றுச் சென்றான்.

தீபாவளிக்குப் பத்து நாட்கள் இருக்கும் பொழுது ஒருநாள் அவன் லக்ஷ்மியின் வீட்டுக்கு வந்தான்.

“லக்ஷ்மி, எழுதி விசாரித்தோம். அவன் 'மகோ'விலிருந்து முதலில் எகிப்துக்குப் போனானாம். அங்கேயிருந்து இத்தாலி, பிரான்ஸ் போர்முனைக்கெல்லாம் அவனை மாற்றினார்களாம். இப்பொழுது அவன் 'கேப்டன்' வேலையில் இருக்கிறானாம். சண்டையெல்லாம் முடிந்து விட்டதால், அவனை இந்தியாவுக்கே அனுப்பிவிடப் போகிறார்களாம். உனக்கு அதிர்ஷ்டமிருந்தால் தீபாவளிக்கே வந்தாலும் வந்து விடுவான்” என்றான் சீனிவாசன்.

“ஆமாம், என் அதிருஷ்டமிருக்கிறதே! என்னவோ, போ! நான் அதிர்ஷ்டக்காரி என்றால் இவ்வளவு நாட்கள் நன்றாயிருந்திருக்க மாட்டேனா? ஆசை வெட்கமறியாது. என்னவோ அன்றைக்கு ஆசையை அடக்க மாட்டாமல் உன்னிடம் உளறிக் கொட்டினேன். நான் செய்த பூஜாபலன் அப்படி!” என்று தன்னைத் தானே நொந்து கொண்டாள் லக்ஷ்மி.



"ஏன், அப்பா! வாயில்லா ஜீவனைப் போட்டு இப்படி அடிக்கிறாய்?"
"பாருங்க, நான் எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கொண்ணு வாங்கி வச்சிருந்தேன், தின்னுட்டுது!"
"அடடே! இப்போதெல்லாம் நீ குதிரைக்குக் கொள்ளுகூட வைக்கிறாயோ?"
"நீங்க ஒண்ணு! குதிரைக்கு இல்லீங்க கொள்ளு; எனக்குத்தான்!"

வருத்தப்படும் அவளிடம் அதிகப் பேச்சுக் கொடுப்பது சரியில்லை என்று எண்ணி சீனிவாசனும் அவளிடம் விடை பெற்றுக் கொண்டு போய் விட்டான்.

தீபாவளிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பே ராமுவும் விசாலமும் வந்து சேர்ந்தனர். விசாலத்தின் பிள்ளை வெங்கிட்டு ஆறு மாசத்துக் குழந்தை. முகம் பார்த்துச் சிரிக்கக் கற்றுக் கொண்டிருந்தான். குப்புறப் படுத்துக் கொண்டு மத்தாப்பு எரிவதைக் கண்டு பிரமிப்புடன் உற்று நோக்கிக் 'கலகல'வெனச் சிரிப்பான். பட்டாசு வெடிக்கும் சத்தத்தைக் கேட்டு வீறிட்டு அழுவான். எல்லாரும் அவனுடைய பிரமிப்பையும் பயத்தையும் கண்டு ஆனந்த மடைந்தனர். கவலையைத் தீர்ப்பது குழந்தையின் அழகிய வதனம் அல்லவா? அந்தக் குழந்தையின் விளையாட்டில் மூழ்கி லக்ஷ்மிகூடத் தன் வருத்தத்தை மறக்க முயலுவாள். ஆயினும் தனிமையில் இருக்கும்பொழுது 'நமக்கு விசாலம் மாதிரி ஆனந்த வாழ்க்கை கிட்டவில்லையே' என்று பொருமுவாள். ஆனால் அவளது பொறாமைத் தீயில் சுட்டு எரிக்கும் வன்மை இல்லை; 'தனக்கு இம்மாதிரி பாக்கியம் கிட்டவில்லையே' என்ற ஏக்கத்தினால் கனிந்து அவிந்து போய்க் கொண்டிருந்த தீதான் அது.

• • •

தீபாவளி யன்று நான்கு மணி சுமாருக்குச் சபேசய்யர் வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து மிகவும் நேர்த்தியாக உடை யணிந்திருந்த ஒருவர் இறங்கி உள்ளே சென்றார். பத்திரிகை படிப்பதில் ஈடுபட்டிருந்த சபேசய்யர் உற்றுப் பார்த்தார். முதலில் சரியாக அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. சற்று கவனித்துப் பார்த்ததும் தன் மாப்பிள்ளை 'சோமு' என்பதைத் தெரிந்து கொண்டு, உள்ளே ஓடித் தன் மனைவியிடம், "மாப்பிள்ளை சோமு வந்திருக்கிறாரடி!" என்று ஆனந்தத்துடன் கூறினார்.

சிறிது நேரத்திற் கெல்லாம் லக்ஷ்மி கையில் காப்பி டம்ளர், பக்ஷணத் தட்டு இவைகளுடன் சோமு இருந்த அறைப் பக்கம் போய்க் கொண்டிருந்தாள். 'திடீரென்று எல்லாரையும் ஆச்சரியத்தில் மூழ்க வைக்கவேண்டும், மனைவியுடன் இப்படி இப்படியெல்லாம் பேச வேண்டும்' என்று பெரிய பெரிய மனக் கோட்டைகளைக் கட்டி வைத்திருந்தான் கேப்டன் சோமு. ஆனால் லக்ஷ்மியைக் கண்டதும் அவன் எண்ணிய எண்ணங்களெல்லாம் ஊமைக் கனவுகளாகி விட்டன. பேச நா எழுந்தால்தானே!

இந்தச் சமயத்தில் விசாலம் உள்ளே நுழைந்து, "என் அத்திம்பேரே! இப்போதுதான் ஊர் ஞாபகம் வந்ததா? எப்பொழுது வந்தீர்கள்? சமாதானம் எல்லாம் எந்த மட்டில் இருக்கிறது?" என்று கேள்விகளைச் சரமாரியாய் அடுக்கினாள்.

"சமாதான உடன்படிக்கைதான் இன்னும் நடந்து கொண்டிருக்கிறதே! உன் அக்காள் கையில் இருக்கிற பக்ஷணத் தட்டும் காப்பியும் என் கைக்கு வந்து விட்டால் சமாதானம் ஆனாற் போலேதான்!"

லக்ஷ்மியும் விசாலமும் 'கலகல'வென நகைத்தனர். அடுத்த விநாடியில் லக்ஷ்மியின் கையிலிருந்த பக்ஷணத்தட்டு சோமுவின் கைக்கு மாறிவிட்டது!

# வாழிய உலகே!

★

சிறுகதை மூலம் சிக்கல் நிறைந்த
எவ்விஷயத்தையும் இனிதாய் விளக்கிப்
பசுமரத் தாணிபோல் பதிய வைப்பவன்;
உள்ளம் களிக்க உபநிஷத் பொருளைத்
தெள்ளிய நடையில் தெவிட்டா அமிழ்தென
அள்ளிக் கொடுக்கும் அபார ஆற்றலான்;
தமிழர் பசிக்குத் தக்க விதமாய்
வியாசர் விருந்தை விருப்பொடு நல்கினோன்;
உயர்ந்த கருத்தோ டுண்மை மிகுந்த
குட்டிக் கதைகளைக் கட்டிப் பாகென
வாரிக் கொடுத்த மாஉப காரி;
வடமொழி தென்மொழி வளமுடை ஆங்கிலம்
ஆகிய மொழிகளில் அறிவைச் செலுத்தி
அமைச்சியல் திறனை அலசிப் பார்த்தவன்;
ஊக்கத் துடனே உலகம் விரும்பும்
தெய்வ மறையாம் திருக்குறள் நூற்கும்
விரிவுரை ஒன்றை விளக்க மாக
ஆங்கிலப் பாஷையில் அழகாய்ச் செய்தவன்;
ஊனை உருக்கி உயிரை உறிஞ்சியே
மக்களை வாட்டிய வட்டிப் பேயும்
கற்றோர் வெறுக்கும் கட்குடிப் பழக்கமும்
நாட்டில் இனித்தலை காட்டா வண்ணம்
அன்புடன் சட்டம் அமைத்தநல் மந்திரி;
இன்னும் கேட்போம் இன்னும் கேட்போம்
என்றே பலரும் இசைத்திடு மாறு
சொற்பொழி வாற்றும் அற்புத வீரன்;
எழுபதாம் ஆண்டிலும் இளமைகுன் றாதோன்;
காசினி வணங்கும் கடவுள் சிருஷ்டியில்
தாழ்ந்த குலமெனத் தள்ளிநாம் வைத்த
ஹரிஜனத் தவரும் அந்தணர்க் கூட்டமும்
வேறல என்றே விளம்பிய ஞானி;
சாந்த ஸ்வரூபியாம் காந்தி அடிகளும்
பொன்னெனப் போற்றும் புலமைக் குடையோன்;
நாற்பது கோடியும் நாவாரப் புகழ்
இந்திய நாட்டு இராஜப் பிரதிநிதி
எனும்அப் பதவியும் இவனுற லாலே
சீரியோர் மகிழச் சிறப்புற் றதுவே;
அதனால், அறமும் அருளும் பெருகி
வாழ்க அரசியல்; வாழ்க அவனொளி;
வாழ்க அவனுரை; வாழிய உலகே!

—மஞ்சேரி எஸ். சுந்தரேசுவரன்,
தமிழ்ச் சங்கம், பம்பாய்.



# அபிவிருத்தியில் பங்காளிகள்

நவயுக வாயிற்படிமீது காலூன்றி, நாம் இன்றைய பாரதநாட்டில் மாபெரும் மாறுதல்களை நேருக்கு நேர் கண்ணுறுகிறோம். வலிமையும் ஒன்றிப்பு மோங்கி, மேலான இருக்கை, உணவு . . . உடுக்கை வசதிகளுடன் சிறந்து விளங்குமோர் தேசமாகும் நம் கண்முன் நிகழ்வது. அப்படிப்பட்ட நாளைய நாட்டிலும் பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்லுகளின் நீடித்துழைக்கும், கவர்ச்சிவாய்ந்த, உயர்ந்த நெசவுத் தரங்களுக்கு நல்ல கிராக்கி யிருக்கத்தான் செய்யுமென்கிற நம்பிக்கை மேன்மேலும் எங்கள் அபிவிருத்திக்குத் தூண்டுகோலாக அமைகிறது.

இன்று ரசாயனங்களுக்கும், சாயங்களுக்குமுள்ள பஞ்சம் எங்கள் உற்பத்தியை மட்டுப்படுத்தியே வருகிறது - ஆவசிய துணி நினுசுகள் மட்டுமே எங்களால் இப்பொழுதும் தயாரிக்க இயலுகிறது. ஆனால் அந்நெசவுத் தரங்கள், எழுபதாண்டுகளாக எங்கள் தயாரிப்புகளைச் சிறப்பித்துள்ள நேரிய தன்மையிலும், உழைப்பிலும், யாவற்றிற்கு மேலான பெறுமதியிலும் கிஞ்சித்தேனும் குறைபாடுகளின்றியே விளங்குகின்றன.

இப்பொழுது, கிடைக்கும் சொற்ப துணிமணிகளை கூடுமான காலம் உழைக்கச் செய்ய வேண்டியிருப்பதால், நீங்கள் இந்தப் பெயர்போன வர்த்தக முத்திரைகளையுடைய ட்வில்கள், ட்ரில்கள், லாங்க்ளாத்து, ஷர்ட்டிங்குகள், ஸூட்டிங்குகள், டஸ்ஸோர்கள் ஆகியவைகளை வாங்குவது முன் எப்பொழுதையும் விட அவசியமாகிறது:



**பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்ஸ்** (சென்னை)

மானேஜிங் ஏஜண்டுகள்: பின்னி & கோ. (மெட்.) லிட்.





# ரொம்ப தமாஷ்!

☆

ஆனால் என்ன என்பது தான் தெரியவில்லை!

ராஜாஜியைப் பார்லிமெண்டரி தூது கோஷ்டியார் "ஹிந்து" காரியாலயத்தில் சந்தித்துப் பேசிய போது எடுத்த படங்கள் இவை.

மேலே: ஏதோ ஹாஸ்ய வெடி குண்டைப் போட்டு விட்டு அதன் சுவாரஸ்யத்தை ராஜாஜியே அநுபவிக்கிறார். சட்டைப் பையில் கை விட்டுக் கொண்டிருப்பவர் தூது கோஷ்டியைச் சேர்ந்த மேஜர் வையாட். இன்னொருவர், "ஹிந்து" ஆசிரியர் ஸ்ரீ கே. சீனிவாசன்.

கீழே: இந்தியாவின் சுதந்திரப் பிரச்னையை ராஜாஜி விளக்கித் தெளிவு படுத்துகிறார். தூது கோஷ்டியார் கவனமாகக் கேட்கிறார்கள்.

☆





அமெரிக்கத் தூதர் பிலிப்ஸ் ராஜாஜியுடன் பேசிய பிறகு அமெரிக்காவுக்கு அனுப்பிய அறிக்கை மிகப் பிரசித்தமானது. இந்தியாவுக்கு உடனே சுதந்திரம் தரவேண்டுமென்று அதில் பிலிப்ஸ் வற்புறுத்தியிருந்தார்.



மாங்குடி சிதம்பர பாகவதர் அக்ராசனத்தின் கீழ் நடந்த சங்கீத வித்வத் சபையை ராஜாஜி திறந்துவைத்தார்.



பாபு ராஜேந்திரப்பிரஸாத்துடன் மத்திய சர்க்கார் மந்திரியாக ராஜாஜி சென்னைக்கு விஜயம் செய்தபோது சென்னை அளித்த வரவேற்பு.

# மார்பில் இரணம்

## மற்றும் மார்ச்சளி

## இவைகளுக்கு விரைவில் குணம்



மார்பில் இரணமிருந்தால் ஆபத்தான கிருமிகள் இருப்பதைக் குறிக்கிறது. கிருமி நாசன ஸ்வாச கரண பில்லைகளான பெப்ஸ் சாப்பிடுவதின் மூலம் இந்த அபாயத்தை ஒழியுங்கள். அது வாயில் கரையும்போதே பெப்ஸ் உயர்ந்த மருந்து சத்தை வெளியிடுகிறது. அது உங்கள் ஸ்வாசத்துடன் ஸ்வாசப் பைக்குள் இழுக்கப் பெற்று அபாயகரமான கிருமிகளை நசிக்கச் செய்து ரணத்திற்கு இதமளித்து குணப்படுத்துகிறது. கபம் கரைந்து இணறல் நீங்குகிறது. விரைவில் இருமல் மற்றும் மார்பு உபாதைகள் நீங்கப்பெற்று தொத்து வியாதிகளுக்கு எதிர்ப்பளிக்கும் சக்தியும் பலம் பெறுகிறது.



# PEPS

## பெப்ஸ்

கிருமி நாசன ஸ்வாச மாத்திரைகள் சாப்பிடுங்கள்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்

ஏஜண்டுகள் :—மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்

No. 2



## நாள் முழுவதும் குதூகலம்தான்!

நியதியின்படி - காலையிலிருந்து இரவுவரை - எக் கவலையுமில்லாமல் உத்ஸாகத்துடன் இருக்கலாம். ஆனால் - குடல் சரிவர சுத்தம் செய்யப்படாவிட்டால், வெறுப்பும், கடுகடுப்பும் ஏற்படுவது இயற்கையே. ஆகையால், உடலின் இயற்கை நியதிகளைப் பாதுகாக்கும் பொருட்டு, புத்திசாலிகளான எல்லா தாய்மார்களும் தங்கள் குழந்தைகளுக்கு காலாகாலத்தில் இந்த மிருதுவான போனோமின்டை கொடுப்பார்கள்.

சுத்தமாக மலமிளக்கும் உன்னத சஞ்சீவி

ரூ. 1-2-0 ரூ. 0-7-0 ஆகிய இரு சைஸ்களில் எங்கும் கிடைக்கும்.

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜெண்டுகள் :

ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி,
99-A, அரமனைக்காரத் தெரு, சென்னை




NO. 4.

# சந்திரஹாரம்

ஆசிரியர் ......... மொழிபெயர்ப்பு
பிரேம்சந்த் ......... ரா. வீழிநாதன்

ஸப் இன்ஸ்பெக்டரும் ரமாநாத்தும் ஸூபரிண்டெண்டெண்டு ஆபீஸுக்குப் போய்ச் சேர்ந்தபொழுது, டிபுடி ஸூபரிண்டெண்டெண்டு தம் அறையில் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டருடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார். ஸப் இன்ஸ்பெக்டர், ரமாநாத்தை வெளியே ஒரு அறையில் உட்கார வைத்துவிட்டு டிபுடியைப் பார்க்க உள்ளே சென்றார். ஸப் இன்ஸ்பெக்டர் ரமாநாத் அகப்பட்ட விவரத்தைச் சொல்லி, அவன் அந்தக் கொள்ளை வழக்கில் சாட்சியம் சொல்லத் தயாராயிருக்கிறான் என்பதையும் சொன்னார்.

டிபுடி எழுந்து ஒரு தடவை உலாவுபவர் போல வெளியில் போய் ரமாநாத்தை ஒரு முறை பார்த்து விட்டுத் திரும்பி வந்தார். பிறகு ஸப் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "ஆள் படித்தவன் போலிருக்கிறதே!" என்றார்.

"ஆமாம், படித்தவன்தான். நாம் எழுத்து மூலம் அவனுக்கு மன்னிப்புப் பத்திரம் அளித்தால்தான் அவன் நம் சொற்படி கேட்பான்."

"அது கொடுக்க வேண்டியது நியாயம் தானே! முதலில், அலகாபாத் போலீசுக்குப் 'போன்' செய்து 'என்ன கேஸ், என்ன விஷயம்?' என்று கேட்டுப் பாருங்கள். கவர்ன்மெண்டுக்குக் கடிதம் எழுதிப் பார்ப்போம்!" என்றார் டிபுடி.

ஸப் இன்ஸ்பெக்டர் 'டெலிபோன் டைரக்டரி'யைப் புரட்டிப் பார்த்து நம்பரைத் தெரிந்து கொண்டு 'எக்ஸ்சேஞ்' ஆபீஸுக்குத் தெரிவித்தார். சிறிது நேரத்துக்கெல்லாம் 'போன்' இணைக்கப்பட்டது. அவர் பேசிவிட்டுப் போனை வைப்பதற்குள்ளேயே டிபுடி ஆதுரத்துடன், "என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டார்.

"அங்கே அந்த மாதிரிக் கேஸே யார் மீதும் இல்லையென்கிறார்களே!"

"இதென்ன கூத்து? இந்த ஆள் தன் பெயரை மாற்றிச் சொல்லியிருப்பானோ?"

"பண மோசடி வழக்கே யில்லவா இல்லையென்று சொல்லுகிறார்கள்!"

"ஆச்சரியமாயிருக்கிறதே! பணத்தைக் கையாடியவன் 'நான் எடுத்தேன்' என்று சொல்லுகிறான்! ஆனால் முனிஸிபாலிடி அம்மாதிரி வழக்குத் தொடுக்கவில்லையென்றால் என்ன அர்த்தம்? சரி, முனிஸிபாலிடியை விசாரித்துப் பாருங்கள்!" என்றார் டிபுடி.

ஸப் இன்ஸ்பெக்டர் மறுபடியும் போனை இணைத்துப் பேசலானார்.

"உங்கள் ஆபீஸில் ரமாநாத் என்று ஒரு குமாஸ்தா இருந்தானோ?"

"ஆமாம், இருந்தான்."

"அவன் உங்கள் ஆபீஸ் பணத்தைக் கையாடிவிட்டு ஓடியது உண்டா?"

"ஆபீஸ் பணத்தைக் கையாடிவிட்டு ஓடவில்லையே! வீட்டிலிருந்து ஓடிவிட்டான். ஆமாம், அவன் அங்கே உங்களிடம் இருக்கிறானா, என்ன?"

"ஆமாம், நாங்கள் அவனைக் கைதுசெய்து வைத்திருக்கிறோம். அவனோ பணத்தைக் கையாடியதாகச் சொல்லுகிறான்; நீங்களோ 'இல்லை' என்கிறீர்களே, என்ன அர்த்தம்?"

"எங்களுக் கென்ன தெரியும்? அவன் மொத்தம் கூட்டிப் போடும்பொழுது தப்பாகக் கூட்டி விட்டான். அதனால் பயந்து ஊரை விட்டே ஓடி விட்டான். பின்னால் கணக்கைப் பார்த்ததில் கணக்குச் சரியாக இருந்தது. வேறொன்றுமில்லை."

இந்தப் பதிலைத் தெரிந்து கொண்டதும் டிப்டி "இந்த ஆளைக்கொண்டு நம் காரியம் நடக்காது போலிருக்கிறதே!" என்றார்.

"என் ஸார்! அவனிடம் இதைப்பற்றி யெல்லாம் நாம் பிரஸ்தாபித்தால்தானே நம் காரியம் கெடும்! மேலே கடிதம் எழுதிப் போயிருக்கிற தென்றும் கூடிய சீக்கிரம் பதில் வந்து விடலாம் என்றும் அவனிடம் சொல்லி நம் காரியத்தை நாம் சாதித்துக்கொண்டு விட முடியாதா? ஆனால் ஒன்று; அவனைப் பார்க்க வருகிற வர்கள் யாரா யிருந்தாலும் பார்த்துப் பேசும்படி விடக் கூடாது. பேச விட்டு விட்டால் நம் காரியம் கெட்டு விடும்" என்றார் ஸப் இன்ஸ்பெக்டர்.

பிறகு அவர்கள் எல்லாரும் சூபரின் டெண்டைக் கலந்து ஆலோசித்தனர். இதே சமயத்தில் பணத்துக்கு ஏற்பாடு செய்வதற்காகப் போயிருந்த தேவிநின் போலீஸ் ஸ்டேஷனுக்குத் திரும்பி வந்தான். ரமாநாத்தும் ஸப் இன்ஸ்பெக் டரும் அங்கே இல்லாமல் இருக்கவே, ஒரு கான்ஸ்டேபிளை விசாரித்தான்.

"இன்ஸ்பெக்டர் ஐயா சூபரின்டெண்டு ஆபீசுக்குப் போயிருக்கிறார்கள்!" என்றான் கான்ஸ்டேபிள்.

தேவிநின் பதற்ற மூற்று, "என்ன! அப்படியானால் தம்பியைச் சிறையில் போட்டு விட்டார்களா?" என்று கேட்டான்.

"இல்லை, அவரையும் கூட அழைத்துக் கொண்டு போயிருக்கிறார்!"

தேவிநின் தலையில் அடித்துக் கொண்டு, "இந்தப் போலீஸ்காரர்கள் வார்த்தையி லேயே கொஞ்சங்கூட நம்பிக்கை வைக் கக் கூடாது. நான் ஒரு மணி நேரத்துக் குள் திரும்பி வந்து விடுகிறேன் என்று சொல்லி விட்டுத்தானே போனேன்! அதற் குள் அவருக்கு என்ன அவ்வளவு பொல்லாத அவசரமோ, தெரியவில்லை! ஐந்நூறு ரூபாய்க்குப் பதிலாக அறுநூறு ரூபாயை வாங்கிக் கொள்ள அவருக்கு என் தான் வலிக்கிறதோ, புரியவில்லை. இனி மேல் என்ன சொல்லி என்ன பிரயோ சனம்? தம்பி மீது சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்ளாமல் இருக்கப் போகி றதா? இனிமேல் நாம் தம்பியை எங்கே பார்க்க முடியப் போகிறது? இவ்வளவு நேரம் அவரைப் பிரயாகைக்கு அனுப்பு வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் கூடச் செய்திருப்பார்கள்!" என்று சொல்லிக் கொண்டே பேய் அறைந்தவன் போலப் பூமியில் உட்கார்ந்து விட்டான்.

சிறிது நேரம் கழித்துக் கான்ஸ்டேபிள், "இம்மாதிரி எத்தனை நேரம் உட்கார்ந்திருக் கப் போகிறாய்?" என்று கேட்டான்.

தேவிநின் சவுக்கடி பட்ட குதிரை போலத் துள்ளி எழுந்து, "வரட்டும் அந்த இன்ஸ்பெக்டர்! அவனை ஒரு கை பார்த்து விட்டுத்தான் இங்கிருந்து நகரப் போகி றேன். எனக்காயிற்று; அவனுக்காயிற்று! என் பிராணனே போனாலும் சரி, அந்த மனிதனுக்குச் சரியான பாடம் கற்பிக் காமல் நான் இங்கிருந்து நகரப் போவ தில்லை. அவனுக்கும் குழந்தை குட்டிகள் இருக்கிறதே, தெய்வத்துக்குப் பயப்பட வேண்டாமா? ஆமாம், இங்கே யிருந்து போகும்பொழுது ரமாநாதபாபுவை நீ பார்த்தாயா? ரொம்ப வருத்தமாக இருந் தாரோ?" என்று கேட்டான்.

"வருத்தமாகப் போகவில்லை. அவரும் ஸப் இன்ஸ்பெக்டரும் சிரித்துப் பேசிக் கொண்டே தான் காரில் ஏறிப் போனார்கள்!" என்றான் கான்ஸ்டேபிள்.

தேவிநினுக்கு அவனுடைய வார்த்தை யில் நம்பிக்கை விழவில்லை. "சிரிக்க வாவது, மண்ணாவது! பாவம், அவருடைய மனம் என்ன பாடு படுகிறதோ?" என்று அனுதாபத்துடன் அவன் கண்ணீர் வடித்தான்.

தேவிநின் வந்து ஒரு மணி நேரங்கூட ஆகியிராது. ஜழவியும் வீட்டில் இருப்புக் கொள்ளாமல் கடையைப் பூட்டிக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கே வந்து விட்டாள். தேவிநின் வாசற்புறத்தில் உட்கார்ந்திருப்ப தைக் கண்டதும் அவள், "இங்கே உட் கார்ந்து கொண்டு என்ன செய்கிறீர்கள்? தம்பி எங்கே?" என்று கேட்டாள்.

தேவிநின் மிகுந்த மன வேதனையுடன், "தம்பியைச் சூபரின்டெண்டிடம் இழுத் துக்கொண்டு போய் விட்டார்களாம்! நம் கண்களில் அவனைக் காட்டத்தான் காட்டு வார்களோ, அல்லது அங்கிருந்தபடியே பிரயாகைக்கு அனுப்பி விடுவார்களோ, யார் கண்டது?" என்றான்.

"அந்த இன்ஸ்பெக்டரும் ஒரு மனுஷ யன் மாதிரி! 'பணம் கொண்டு வா' என்று சொல்லிவிட்டு அப்புறம் பேச்சை மாற்றுவானேன்? வந்ததும், 'உன் புத்தி எங்கே போயிற்று?' என்று அவனைக் கேளுங்கள், விடாதீர்கள்!"

"அதற்காகத்தான் இங்கே உட்கார்ந்திருக்கிறேன்."

"வரட்டும் அவன்! நானே கேட்கிறேன். அவனிடம் எனக்கென்ன பயம்?"

"கடையில் யார் இருக்கிறார்கள்?"

"ஒருத்தரும் இல்லை. பூட்டிக் கொண்டு வந்திருக்கிறேன். நேற்று இரவிலிருந்து தம்பி பச்சைத் தண்ணீர் பல்லில் படவில்லை, பாவம்! என்ன பசி பசிக்கிறதோ?... நாசமாய்ப் போக, அந்தக் குடி கெடுத்த ஆட்டம்! அதற்கு டிக்கெட் வாங்க வந்தனுல்தானே வந்தது இந்த ஆபத்து! வீட்டிலிருந்து வெளியே கிளம்பாமல் இருந்திருந்தால் இந்தக் கஷ்டங்கள் அனுபவிக்க வேண்டி வராதோ, இல்லையோ?"

"அங்கிருந்தபடியே பிரயாகைக்கு அனுப்பி விடுவார்களோ?"

"யார் கண்டது? போனதும் கடிதம் போட மாட்டாரா? அங்கே நாம் போய்ப் பார்த்துக் கொண்டால் போகிறது!" என்றான் ஜெழவி.

தேவீதின் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்தோட, "கடிதம் எழுதுவதோ, மண்ணோ? எத்தனை வருஷம் சிறையில் அடைபட்டு வாடவேண்டுமோ?" என்றான்.

"பணத்தைக் கட்டி விட்டால் அப்புறம் எதற்குத் தண்டனை? சர்க்காருக்குப் பணம்தானே வேண்டும்?"

"அடி பைத்தியமே! பணம் கட்டிவிட்டால் மட்டும் போதுமா? திருடன் எடுத்த பொருளைத் திருப்பிக் கொடுத்து விட்டால் அவனைச் சும்மா விட்டுவிடுவார்களா?" என்றான் தேவீதின்.

அப்புறம்தான் ஜெழவிக்கு உண்மை விளங்கியது. அவன் "இன்ஸ்பெக்டர்......" என்று ஆரம்பித்தான்.

ஜெழவி வாக்கியத்தை முடிப்பதற்கு முன்னால் போலீஸ் ஸ்டேஷனின் வாசலில் கார் வந்து நின்றது. ஸப் இன்ஸ்பெக்டர், ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர், ரமாநாத் மூவரும் இறங்கினர். தேவீதின், ஜெழவி இருவரையும் பார்த்ததும் ரமாநாத் மலர்ந்த முகத்துடன் அவர்களருகில் ஓடி வந்து, "எத்தனை நாழிகையாக நீ இங்கே உட்கார்ந்திருக்கிறாய், அப்பா? அம்மா, நீ எப்பொழுது வந்தாய்?" என்று கேட்டான்.

ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் இறங்கியதும் நேரே ஆபீஸ் அறைக்குள் சென்று விட்டார். ஸப் இன்ஸ்பெக்டர் தேவீதினைப் பார்த்து, விநோதம் ததும்பும் குரலில்,

"என்ன அப்பா, பணம் கொண்டு வந்தாயா?" என்று கேட்டார்.

"கொண்டு வருகிறேன் என்று சொல்லி விட்டுப் போனபின், வெறும் கையோடு திரும்பி விடுவேனா, எசமான்? இதோ இருக்கிறது, உங்கள் பணம்!...தம்பி, ஜெழவி ரொம்ப நாழிகையாக உனக்காக நின்று கொண்டிருக்கிறாள். நீ அவளுடன் வீட்டுக்குப் போ! நான் இதோ பணத்தைக் கட்டிவிட்டு வந்து விடுகிறேன்!" என்றான் தேவீதின்.

"அப்பா, உன் பணத்தை நீயே வைத்துக்கொள். என்னுடைய மேலதிகாரிகள் எல்லாரும் இவரை விடக்கூடாது என்று ஒரு முகமாய் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆகையால் நான் இவர் விஷயத்தில் ஒன்றும் செய்வதற்கில்லை" என்று ஸப் இன்ஸ்பெக்டர் கையை விரித்தார்.

இதைக் கேட்டதும் தேவீதினுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. அவன் உதடுகள் துடித்தன. "இன்ஸ்பெக்டர் ஐயா, இப்படி நீங்கள் வார்த்தை புரண்டு பேச



வது கொஞ்சங்கூட நன்றாயில்லை. நீங்கள் கேட்டபணத்தை இதோ கொண்டுவந்திருக்கிறேன். இதை வாங்கிக்கொண்டு, நீங்கள் சொன்ன சொற்படி நடவுங்கள். வார்த்தை புரண்டு பேசுவது உங்களைப் போன்ற ஆண்பிள்ளைகளுக்கு அழகில்லை!" என்றான்.

தேவீதினுடைய இந்தக் கடுஞ் சொற்களைக் கேட்டதும் ஸப் இன்ஸ்பெக்டருக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்திருக்க வேண்டும். ஆனால் அவர் கொஞ்சங்கூட முகம் சிணுக்கிக் கொள்ளவில்லை. அவர் சிரித்த வண்ணமே, "நீ என்னைப் பற்றி என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டு போ! எனக்கு அக்கறையில்லை. சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதற்காக நான் என்னுடைய பிரமோஷனை உதறித் தள்ளி விடுவதற்குத் தயாராயில்லை!" என்று சொன்னார்.

ஸப் இன்ஸ்பெக்டர் சிரித்துக் கொண்டு பதில் சொல்லுவதைக் கண்டதும், தேவீதினுக்குக் கோபம் அதிகரித்தது. "அப்படியானால் பணம் கொண்டு வா என்று என்னிடம் எதற்காகச் சொன்னீர்கள்?" என்று ஸப் இன்ஸ்பெக்டர் மீது சீறி விழுந்தான்.



"என்னவோ அப்பொழுது சொன்னேன்!"

"நீயும் ஒரு ஆண்பிள்ளை மாதிரி! மீசையைச் சிரைத்து முக்காடு போட்டுக் கொண்டு வீட்டு மூலையில் உட்கார்ந்திருக்கத்தான் நீ லாயக்கு!"

"எனக்கும் மீசையை எடுத்துவிட வேண்டும் என்று ரொம்ப நாளாகவே ஆசை. இந்தச் சனியன் பிடித்த தயிரும், பாலும், நெய்யும் மீசையில் ஒட்டிக்கொண்டு பிராணனை வாங்குகிறது. ஆனால் இவ்வளவு நாள் வைத்துக் கொண்டிருந்து விட்டு, திடீரென்று எடுத்து விடுவதற்கு வெட்கமாயிருந்தது. அதனால்தான் எடுக்காமல் இருந்தேன். நீ தைரியம் ஊட்டும்பொழுது இனிமேல் எனக்கு என்ன பயம்?"

"உன் வேடிக்கை அப்புறம் இருக்கட்டும். நீ சிரிப்பதைப் பார்த்தால் எனக்கு வயிற்றைப் பற்றி எரிகிறது! இன்ஸ்பெக்டராம், இன்ஸ்பெக்டர்! எதற்குத்தானோ இந்த மானங்கெட்ட பிழைப்பு!" என்று தேவீதின் ஆத்திரத்துடன் மறுமுறையும் ஸப் இன்ஸ்பெக்டரை அலறினான்.

சமாதானத்தினால் அதற்குமேல் பொறுமையாக அவனுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. அவன் லேசாகச் சிரித்துக் கொண்டு, "அப்பா, இன்ஸ்பெக்டர் வேண்டுமென்றே உனக்குக் கோபமூட்டி வேடிக்கை பார்க்கிறார். நாங்கள் பேசி ஒருவித முடிவுக்கு வந்து விட்டோம். ஒரு தம்பிடிகூடச் செலவில்லாமல் நான் விடுபட்டு விடுவேன். அது மட்டும் இல்லை; நல்ல வேலைகூடக் கிடைத்து விடும். கவலைப்படாதே! சூபரின்டெண்டே நேரில் வாக்களித்திருக்கிறார்" என்றான்.

தேவீதின் வழி தவறியவன் பேச்சைப் பேந்த விழிப்பதுபோல் விழித்துக் கொண்டே, "அதெப்படியப்பா நடக்க முடியும்? ஆகாத காரியத்தைப் பற்றிப் பேசி என்ன பயன்? போலீஸ்காரர்களின் வார்த்தையில் துளிக்கூட நம்பிக்கை வைக்காதே! அவர்கள் தங்கள் காரியம் ஆக வேண்டியிருந்தால் சிரிக்கச் சிரிக்கப் பேசி உன்னை வலையில் போட்டுக் கொள்ளப் பார்ப்பார்கள். காரியம் ஆகிவிட்டால் உதறித் தள்ளிவிடுவார்கள். அவர்கள் பேச்சில் மயங்கி எதையும் ஒத்துக் கொண்டு விடாதே!" என்று உபதேசம் செய்தான்.

ரமாகாந்த் வெகு நம்பிக்கையுடன், "ஒன்றுமில்லையப்பா! ஒரு வழக்கில் நான் சாட்சி சொல்ல வேண்டுமாம். அவ்வளவு தான்!" என்றான்.

தேவீநின் தலையை அசைத்துச் சந்தேகத்துடன், "அது ஏதாவது பொய் வழக்காக இருக்கும்!" என்றான்.

"இல்லை அப்பா! உண்மையான வழக்குத் தான். நான் முன்னாலேயே கேட்டுத் தெரிந்து கொண்டு விட்டேன்!"

தேவீநினின் சந்தேகம் தீரவில்லை. "நான் உனக்கு இதைப்பற்றி அதிகமாகச் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? எதற்கும் ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக யோசித்துக் காரியத்தில் இறங்கு. அவ்வளவுதான் எனக்குச் சொல்லத் தெரியும். காசு செலவழிக்க நான் பயந்தவனல்ல. உன் விஷயத்தில் லட்சம் ரூபாய் தான் செலவழியட்டுமே, நான் செலவழிக்கத் தயார். அதைப்பற்றி யோசிக்காதே! இந்தத் தேவீநினுக்கு முன் வைத்த காலைப் பின் வைப்பதென்பதே தெரியாது, தம்பி! சொல்லுவதை நம்பு. ஆமாம், 'என்ன வழக்கு?' என்று கேட்டுத் தெரிந்து கொண்டாயா?" என்று அவன் கேட்டான்.

ஸப் இன்ஸ்பெக்டர் ரமாகாந்துக்குப் பதில் சொல்லுவதற்குச் சந்தர்ப்பம் அளிக்காமல் தானே ஆரம்பித்தார்:

"அந்தக் கொள்ளைக் கேஸைப்பற்றி உனக்குத் தெரியுமோ, இல்லையோ? எத்தனையோ ஏழை மக்கள் அதில் சிக்கி மடிந்தனரே! இந்தப் பிராந்தியத்தையே அந்தக் கொள்ளைக்காரர்கள் கதிகலங்க அடித்து விட்டார்கள். அவர்களிடமுள்ள பயத்தினால் எவருமே சாட்சி சொல்ல முன்வர மாட்டேன் என்கிறார்கள்."

இதைக்கேட்டதும் தேவீநின் வெகு அலட்சியமாக, "அப்படியா சமாசாரம்! இவரைச் சர்க்கார் தரப்புச் சாட்சியாக ஆக்கப் பார்க்கிறீர்களா? பேஷான யோசனைதான்! தம்பி, சர்க்கார் தரப்புச் சாட்சி யென்றால் என்னவென்று தெரியுமோ, இல்லையோ? இந்தப் போலீஸ்காரர்கள் சொல்லிக் கொடுப்பதை யெல்லாம் ஒரு எழுத்துக்கூடப் பிசகாமல் அப்படியே கோர்ட்டில் ஒப்பிக்க வேண்டும். புரிகிறதா? நானோ சின்ன புத்திகாரன்! இதைப்பற்றி யெல்லாம் உங்களைப்போல எனக்கு என்ன அவ்வளவு அதிகமாகத் தெரியும்? ஏதோ தெரிந்ததைச் சொல்லி வைத்தேன். ஆனால் இது ஒன்று மட்டும் நிச்சயம். என்னிடம் 'நீ சர்க்கார் தரப்பில் சாட்சி சொன்னால் உனக்கு லட்சம் ரூபாய் இல்லை; கோடி ரூபாய் தருகிறோம்' என்று சொன்னாலும் நான் சர்க்கார் தரப்புச் சாட்சியாவதற்குச் சம்மதிக்கவே மாட்டேன். 'யார் குற்றவாளி? யார் குற்றவாளி இல்லை' என்பது வெளி ஆசாமிகளான நமக்கு என்ன தெரியும்? நாம் அப்படிப்பட்ட சாட்சி சொன்னால், இரண்டு குற்றவாளிகளுடன் இரண்டு குற்றமற்றவர்களுக்கும் தண்டனை கிடைக்கதானே கிடைக்கும்? அது பாவமல்லவா?" என்றான்.

"அப்படிச் சொல்லாதே! இன்று வரை பிடிபட்டிருக்கும் அத்தனை ஆசாமிகளும் பக்காக் கொள்ளைக்காரர்கள். கொஞ்சமும் சந்தேகப்படாதே!" என்று ஸப். இன்ஸ்பெக்டர் குறுக்கிட்டார்.

"நீங்கள் சொல்லுகிறீர்கள்! ஆனால் எது உண்மை என்று எங்களுக்கு எப்படித் தெரியும்?"

"நாங்கள் எதற்காகக் குற்றமற்றவர்களுக்குத் தண்டனை யளிக்கப்போகிறோம்? நீயே யோசித்துப் பார்!"

"உங்களைப் போன்ற நூற்றுக் கணக்கானவர்களை நான் பார்த்திருக்கிறேன். காலி விருந்து தலை வரை ஒரே பளுகு. என்னைக் கேட்டால், 'இவர்மீது நீங்கள் வழக்கு நடத்துங்கள். இவர் இரண்டொரு வருஷம் சிறைத் தண்டனை அடைந்தாலும் பரவாயில்லை. நீங்கள் சொல்லிக் கொடுக்கும் பொய்களை யெல்லாம் சொல்லிக் குற்றமற்றவர்களுக்குத் தண்டனை வாங்கிக் கொடுக்கும் மகா பாவத்தைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அது மேலானது' என்றுதான் நான் சொல்லுவேன்" என்றான் தேவீநின் அழுத்தமாக.

இதைக் கேட்டதும் ரமாகாந்த் பயத்துடன், "வழக்குச் சம்பந்தமான காகிதங்களை யெல்லாம் நான் படித்துப் பார்த்து விட்டேன். அதில் குற்றமற்றவர்கள் யாருமே இல்லை. ஆகையால்தான் நான் ஒப்புக் கொண்டேன்" என்றான்.

தேவீநின் மிகவும் மனவருத்தத்துடன், "இருக்கலாம் அப்பா, இருக்கலாம். அது இல்லாவிட்டாலும்தான் என்ன? அவனவன் உயிர் அவனவனுக்கு வெல்லம் அல்லவா!" என்று சொல்லிச் 'சடக்'கென முகத்தைத் திருப்பிக் கொண்டான். அவனுக்குத் தன் மன உணர்ச்சியை வெளி

விட இதைவிடத் தெளிவாக வேறு வழி ஏதாவது தோன்றினால்தானே?

அவன் இரண்டு எட்டுக்கூட எடுத்து வைத்திருக்க மாட்டான். திடீரென்று ஏதோ ஒரு விஷயம் நினைவுக்கு வந்தவனாய்த் திரும்பி, "ஆமாம், உன் கைச் செலவுக்கு வேண்டுமானால் கொஞ்சம் பணம் கொடுத்து விட்டுப் போகட்டுமா?" என்று கேட்டான்.

ரமாகாந் வெகு சந்தோசத்துடன், "எதற்குப் பணம்? வேண்டாம்" என்றான்.

"இன்று முதல் இவர் இங்கேதான் இருக்க வேண்டும்" என்றார் ஸப் இன்ஸ்பெக்டர்.

தேவீதின் கடுகடுப்புடன், "எல்லாம் தெரியும் ஐயா, எனக்கு! இவர் இனிமேல் சர்க்கார் விருந்தாளி; நல்ல நல்ல விருந்துச் சாப்பாடு சாப்பிடுவார்; ஜோரான பங்களாவில் வசிப்பார். இட்ட வேலைகளைச் செய்வதற்கு இவருக்கு வேண்டிய பணியாட்கள் இருப்பார்கள். அவசரத்துக்கு உபயோகிப்பதற்காக, இவருக்குக் கையோடு ஒரு மோட்டார் கார்கூடக் கொடுத்திருப்பீர்கள். இனிமேல் இவருக்கு என்ன குறைச்சல்? இவர் பாடு குஷிதான்! ஆனால் வெளியாட்கள் யாரும் வந்து இவருடன் தனித்துப் பேசவும் முடியாது; இவராகத் தனியே எங்கேயும் வெளியே போகவும் முடியாது. இந்த நிபந்தனைகளும் போட்டு விடுவீர்கள்! இம்மாதிரி வழக்குகளை நான் எத்தனையோ தடவைகள் பார்த்திருக்கிறேன்!" என்று சொல்லிக் கொண்டே வெகு வேகமாக வெளியேறினான்.

அவனுக்கு அங்கே நிற்பது என்றாலே மூச்சுத் திணறிப் பிராணன் போய்விடும் போலிருந்தது. ஸப் இன்ஸ்பெக்டர் அவனைக் கூப்பிட்டார். ஆனால் அவன் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. அவன் முகத்தில் சோகக்குறி தாண்டவமாடியது. அவன் மட்டும் வெளியே வருவதைப் பார்த்த கிழவி, "தம்பி வரவில்லையா?" என்று அன்பு ததும்பும் குரலில் கேட்டாள்.

தேவீதின் சாலையைப் பார்த்துக் கொண்டே, "தம்பி இனிமேல் வரமாட்டான். நம்மவர்களே நமக்குச் சொந்தமில்லாத பொழுது, அயலார்கள் அயலார்கள் தானே! அவர்கள் எப்படிச் சொந்தமாவார்கள்?" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டான்.

அவன் முன்னே செல்லக் கிழவி அவன் பின்னாலேயே ஏதோ முணுமுணுத்துக் கொண்டே நடந்தாள். (தொடரும்)

# காலக்ஷேபம்

## கடைக்காரர் கவலை

ஒருவர் (மருந்துக் கடைக்காரரிடம்):— உமது ஆள் நேற்று ஒருவருக்கு வயிற்று வலி மருந்துக்குப் பதிலாகப் பாஷாணத்தை எடுத்துக் கொடுத்துவிட்டான்; அவர் இறந்து போய்விட்டார்!

மருந்துக் கடைக்காரர் (வேலைக்காரனைக் கூப்பிட்டுக் கோபத்துடன்):—என்னடா நீ, உபயோக மற்றவனாயிருக்கிறாய்! நீ இப்படி மருந்து கொடுத்தால் நம் கடைக்கு அப்புறம் யாராவது திரும்பி வருவார்களா?

★

## எது முக்கியம்?

தெருவின் ஒரு மூலையில் வந்து நின்று கொண்டு வியாபாரம் செய்த ஒருவன், "இந்தச் சீப்பு ரொம்ப உறுதியானது. நன்றாய் வளையும்; சுத்தியால் உடைத்தாலும் உடையாது; கல்லை வைத்து நொறுக்கினாலும் நொறுங்காது; பல்லால் கடித்தாலும்......!" என்று ஏதேதோ சொல்லிக் கொண்டு போனான். நடுவில் ஒருவர் அவனை இடைமறித்து, "அதெல்லாம் சரிதானய்யா; தலைவாரிக் கொள்ள உபயோகப் படுமா, சொல்லும்!" என்றார்!

★

## உதவினான்!

"தொழிலாளிகளுக்காக என் தகப்பனார் மிகவும் பாடுபட்டார்."

"அப்படியா? அவர் என்ன, பொதுவுடைமை வாதியா?"

"அதெல்லாம் இல்லை; அவர்கள் வேலைக்குப் போக முக்கியமான உதவி செய்தார். அவர்களுடைய அலாரம் கடிகாரங்களையெல்லாம் ரிப்பேர் செய்து கொடுத்து வந்தார்!"

★

## திருடவில்லை!

நீதிபதி:—நீ திருடினாயா?

குற்றவாளி:—சத்தியமாக இல்லை.

நீதிபதி:—அப்படியானால், நீ அந்த வீட்டின் பின் பக்கமாக வெளியே ஓடுவானேன்?

குற்றவாளி:—முன் பக்கம்தான் ஒரு போலீஸ்காரன் இருந்தானே!

★

## சுருக்கம்தான்!

"அது என்ன அவ்வளவு பெரிய கடிதம்?"

"என் மனைவி எனக்கு எழுதியிருக்கிறாள். மொத்தம் பதினாறு பக்கங்கள்தான்!"

"அப்படி என்ன எழுதியிருக்கிறாளோ?"

"எல்லா விஷயங்களையும் நேரில் வந்து சொல்லுவதாக எழுதியிருக்கிறாள்!"

# நோயுற்ற குழந்தைகளுக்குப் பல வருடங்களாக சேவை புரிந்து வருகிறது



ஜம்மியின் லிவர்க்யூர் பல்லாண்டுகளாக செய்து வரும் சேவையால் ஆயிரக்கணக்கான விலையற்ற சிற்றுயிர்கள் ஈரல் குலைக்கட்டி வியாதிகளிலிருந்து காப்பாற்றி மனித சமூகத்திற்கு விசேஷ நன்மை புரிந்துவருகிறது.

டாக்டர்கள் இவ்வியாதியைபோக்க ஆரம்ப நிலை, கட்டி முதிர்ந்த நிலைக்குத்தகுந்தவாறு 'சிம்பிள்' அல்லது 'காம்ப்பிளிகேட்டட்' லிவர்க்யூர் மருந்துகளை சிபார்சு செய்து இவ்வியாதியை குணப்படுத்துகிறார்கள்.

ஜம்மியின் சிம்பிள் லிவர்க்யூர் சிறிய அளவில் கொடுத்துவர, வியாதி வராமல் தடுக்கவும், பசி, ஜீரண சக்திவிருத்தி செய்யவும் மலச்சிக்கல்களைப் போக்கி ஈரல், குலைகளை சரியானபடி வேலைசெய்கிறது.

முன்னால் ஈரல் குலைக்கட்டி நோயினால் பீடிக்கப்பட்ட குழந்தைகளின் தாய்மார்கள் திரும்பவும் கர்ப்பம் தரிக்கும் பொழுது ஜம்மியின் டானிக்கை உபயோகப்படுத்துவது நல்லது. பிறக்கப் போகும் குழந்தையின் ஈரல், குலைகள் தாய் மூலமாய் ஏற்படுகிறது என்ற ஆயுர்வேத சித்தாந்தத்தை அனுசரித்து இந்த டானிக் தயாரிக்கப்பட்டுள்ளது.

## ஜம்மியின் லிவர்க்யூர்



எங்கும் கிடைக்கும்.

ஜம்மி வெங்கடரமணய்யா அன் ஸன்ஸ்

மைலாபூர், மதராஸ், (போன் நெ. 8139)

தெப்பகுளம், திருச்சினாப்பள்ளி, பெரிய தெரு கும்பகோணம், பெங்களூர், பம்பாய் 4, (போன் நெ. 41593) மற்றும்: கல்கத்தா, லக்னோ, etc.

ADARTS J. 234 TAMIL

தேனி நாடார் சரஸ்வதி உயர்தர கலாசாலை அபிவிருத்தி நிதிக்காக



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

### உதவும் சங்கீதக் கச்சேரி

*

ஆஸ்தான வித்வான்
மைசூர் டி. சௌடய்யா ... பிடில்
கல்பாத்தி ராமநாதன் ... மிருதங்கம்
ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்

**30-1-48 வெள்ளி மாலை 5-30 மணிக்கு**

**தேனி, நாடார்**
**சரஸ்வதி ஹைஸ்கூல் காம்பவுண்டில்**

ரஸிகமணி
**ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார்**
அவர்கள் தலைமை வகிப்பார்கள்

டிக்கெட்டுகள்: ரூ. 250/: 100/: 50/: 25/: 10/:

நாடார் சரஸ்வதி உயர்தரக் கலாசாலைக் கமிட்டி, தேனி

ஒலி பெருக்கி: திருச்சி ரேடியோ சேல்ஸ் & சர்வீஸ்.

---

பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

5,00,000 நூற்கும் கதிர்கள். நம்பர் 80 வரை நூல்கள்.

எங்களுடைய விசேஷமான நூல்கள்: ஒற்றை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

நாங்கள் சப்ளை செய்வது: கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய கார்டிங் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கலந்த வெப்ட், கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான கன்ன நூல்கள் எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

தற்போது நூல் விநியோகம் கட்டுப்பாடு செய்யப்பட்டுள்ளதால், நூல் தேவையானவர்கள் தங்கள் சர்க்காரை அல்லது சம்பந்தமான டெக்ஸ்டைல் கண்ட்ரோல் அதிகாரிகளுக்கு விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

மானேஜர்கள்: ஏ. & எப். ஹார்வி லிமிடெட்.

